# புதிய புத்தகங்கள்

## மெல்லத்திறக்கும் மனக் கதவு

(நாவல்)

மலர் மன்னன்

விலை : ரூ 4-00

வெளியீடு ; கலைஞன் பதிப்பகம்

81 பாண்டி பஜார்

சென்னை 17

## செவ்வல்லி இதழ்கள்

(சிறுகதைகள்)

விலை : 5-00

வி. எஸ். சுப்பையா

பாரி நிலையம்

59 பிராட்வே

சென்னை 1

## ஆனந்த வெள்ளம்

(சிறுகதைகள்)

வி. எஸ். சுப்பையா

விலை : ரூ. 6-00

பாரி நியலைம்

59 பிராட்வே சென்னை-1

## தமிழ்ச் சிறுகதை முன்னோடிகள்

டாக்டர். தண்டாயுதம்

விலை : ரூ. 5-50

வெளியீடு : தமிழ்ப் புத்தகாலயம்

576 பைக்ராப்ட்ஸ் ரோடு

சென்னை 5

## சார் போஸ்ட்

(நாவல்)

இதயன்

விலை : ரூ. 4-00

வெளியீடு : செல்வி நிலையம்

சேலம் 7

## கதைக் கலை

அகிலன்

விலை : ரூ. 3-00

வெளியீடு : தமிழ்ப் புத்தகாலயம்

சென்னை 5

## கிராண்ட் ரோடு

(நாவல்)

இதயன்

விலை : ரூ. 4-25

வெளியீடு : செல்வி நிலையம்

சேலம் 7

## நூறு பூக்கள் மலரும்

(மலையாள மொழி பெயர்ப்பு நாவல்)

விலை : ரூ. 15-00

வெளியீடு : கலைஞன் பதிப்பகம்

சென்னை 17

# ஸோல்ஸனிட்ஸின் - ஒரு பரிசீலனை

**எஸ். வி. ராஜதுரை**

**1962**-ஆம் ஆண்டு ரஷ்யாவில் நோவிமிர் இலக்கியப் பத்திரிகையில் வெளியான "ஐவான் டெனிசோவிச்சின் வாழ்வில் ஒரு நாள்" என்ற நாவலின் மூலம் உலகுக்கு அறிமுகமான எழுத்தாளர்தான் அலெக்ஸாண்டர் ஸோல்ஸனிட்ஸின். "ஸ்டாலினிசப் பனிக் கட்டியை உருக்குவதற்காக" குருஷ்சேவ் பயன்படுத்திய இலக்கியக் கருவியாக அவர் சிலகாலம் இருந்தார். அதே இலக்கிய ஏட்டில் அவர் எழுதிய "மாட்ரியோனாவின் இல்லம்" முதலிய சிறுகதைகள் பிரசுரிக்கப் பட்டன. "இலட்சியத்தின் நன்மைக்காக" (For the Good of the Cause) என்றகுறுநாவல் தான் கடைசியாகப் பிரசுரமாயிற்று. அது ரஷ்யாவுக்குள்ளேயே பலத்த இலக்கிய, அரசியல், தார்மீகச் சர்ச்சைகளைத் தூண்டி விட்டது. 'நோவிமிர்' துவக்கிவைத்த இச் சர்ச்சையில் கல்லூரி ஆசிரியர்கள், தொழிலாளிகள், சக எழுத்தாளர்கள், கட்சித் தலைவர்கள், லெனினுக்குத் தோழராக இருந்த பழம் போல்ஷ்விக்குகள் ஆகியோர் பங்கு பெற்றனர். பெரும்பாலோர் ஸோல்ஸனிட்ஸினை ஆதரித்தனர். விமர்சித்தோர் காரணங்கள் முதலில் ஒருவகையாகவும் பிறகு வேறு வகையாகவும் இருந்தன.

ரஷ்யாவில் உள்ள மிகச் சிறிய நகரமொன்றில் ஒரு தொழில் நுணுக்கப்பள்ளி. இடவசதிக் குறைவான ஓர் பழம் கட்டிடத்தில் நெருக்கியடித்துக்கொண்டு பள்ளியை நடத்துகிறார்கள். புதிய கட்டிடம் ஒன்று உருவாகிறது, சோதனைக் கூடங்கள், விளையாட்டரங்கங்கள், மாணவர்கள் தங்குமிடம் ஆகியவற்றுக்காகத் தனித்தனி இடங்களைக் கொண்ட மிக வசதியான புதிய கட்டிடம். சீக்கிரமே கட்டி முடிக்கப்படவேண்டும் என்று மாணவர்களுக்குப் பேரார்வம்; விடுமுறைகளையும், ஓய்வு நேரங்களையும் கட்டிடம் கட்டுவதில் செலவிடுகிறார்கள்—தம் உடல் உழைப்பை நல்கி கட்டிடம் கட்டிமுடிக்கப்படுகிறது. பள்ளித் தலைமையாசிரியர் புதிய கட்டிடத்துக்கு எப்போது போகலாம் என்பதை அறிந்துவரக் கட்சித் தலைவரொருவரைச் சந்திக்கச் செல்கிறார். அவருக்குக் காத்திருந்த செய்தியோ "புதிய கட்டிடம் ஓர் ஆராய்ச்சி நிலையத்துக்குத் தேவைப்படுகிறது. கட்சியின் மேலிடம் அவ்வாராய்ச்சி நிலையத்தை இந்த நகரத்தில் அமைத்துக்கொள்ள அனுமதி கொடுத்து விட்டது. இம்முடிவு இலட்சியத்தின் நன்மை (For the Good of the Cause) கருதி எடுக்கப்பட்டது."

அந்த நகரம், ரஷ்யாவில் உள்ள 'கார்க்கி' போன்ற பெரிய தொழில் நகரங்களுக்கு இணையாகவேண்டும். அதற்காக "மர்மமான" அந்த ஆராய்ச்சி நிலையம் அந்த நகரத்திலேயே அமைக்கப்படவேண்டும். அந்நிலையத்தைக் கொண்டு வருவதன் மூலமும் அதற்குப் போறுப்பேற்பதன் மூலமும் தம் அதிகாரம், செல்வாக்கு உயரவேண்டும் என்பதற்காகத் திட்டமிட்டுச் சதி செய்து, இளம் உள்ளங்களை ஏமாற்றி வஞ்சித்த அதிகார வர்க்க மனப்பான்மை கொண்ட கட்சித் தலைவர்கள் இருவரை (குட்டி ஸ்டாலின்கள்) அம்பலப்படுத்துகிறார் ஸோல்ஸனிட்ஸின். நல்ல மனப்பான்மையும், வாய்மையிலும், நியாயத்திலும் நம்பிக்கை கொண்ட மற்றொரு கட்சி ஊழியரையும் அறிமுகப்படுத்துகிறார்.

ஸோல்ஸனிட்ஸினை விமர்சித்தவர்கள் முதலில் கூறிய குற்றச்சாட்டு என்ன? நன்மை, தீமை, இலட்சியம் முதலியவற்றை ஸ்தூலமாகக் கொள்வதில்லை, அவை ஸோலஸனிட்ஸினுக்கு அரூபமான (abstract) கருத்தமைப்புகள். பிறகு சொல்லப்பட்ட குற்றச்சாட்டு என்ன? ஸோல்ஸனிட்ஸின் சொன்னதெல்லாம் சரி. அவர் சாடும் குட்டி ஸ்டாலின்கள் இருந்ததென்னவோ உண்மை. ஆனால் அவர்கள் முற்றாக ஒழிக்கப்பட்டு விட்டார்கள். மேலும், அவர் சித்தரித்துள்ள நேர்மையான கட்சி ஊழியர்களுக்குப் பஞ்சமில்லைதான். ஆனால் எதார்த்த வாழ்வில், கதையில் வருவது போல் பலகீனர்களாக இல்லை. தீயவரை வெல்லும் பலமிக்கவர்களே அவர்கள். மொத்தத்தில் ஸோல்ஸனிட்ஸின் இறந்த காலத்தில் வாழ்கிறார். என்றோ நடந்த ஒன்றைச் சொல்கிறார். நிகழ்காலத்தை அவர் பார்ப்பமேதயில்லை.

ஸோல்ஸனிட்ஸினை ஆதரித்தவர்கள் இக்குற்றச்சாட்டுகளை மறுத்தார்கள். கம்யூனிச இலட்சியம் இவர்களுக்குப் பள்ளிகளைக் கட்டித் தருவதிலும், அவர்களை வஞ்சிக்காமல் இருப்பதிலும்கூட அடங்கியிருக்கிறது என்றார்கள். குட்டி ஸ்டாலின்கள் முற்றிலும் அழிக்கப்படவில்லை. மாறாக, ரஷ்யா முழுவதிலும் நிரம்பிக் கிடக்கிறார்கள் என்று வாதிட்டார்கள். ரஷ்யாவில் 'செல்வாக்கு' நிறைந்த இலக்கிய ஏடான 'லிட்டரரி கெஜட்' இச்சர்ச்சைகளுக்கு முற்றுப்புள்ளி வைக்குமாறு 'நோவிமிர்', ஏட்டுக்கு உத்தரவிட்டது. அதன் பிறகு "இலட்சியத்தின் நன்மை" கருதி ஸோல்ஸனிட்ஸனுக்கு நிரந்தரமான வாய்ப்பூட்டு போடப்பட்டது.

"தொலைவிலுள்ள எதிர்கால இலட்சியங்களுக்காக, நிகழ்கால உடனடி நன்மைகளை (interest) பலியிடுவது" என்ற அல்பர்ட் காமுவின் குற்றச்சாட்டுகளை ஒத்ததாகத் தோன்றினாலும், ஸோல்ஸனிட்ஸினின் நோக்கம் நிச்சயமாக அதிகாரவர்க்க மனப்பான்மை நிறைந்த 'குட்டி ஸ்டாலின்'களை அம்பலப்படுத்துவதுதான். ஸோல்ஸனிட்ஸின் கம்யூனிஸ மனிதாபிமானம் கொண்ட ஓர் சமுதாய விமர்சகர் என்ற ஒரு எண்ணத்தையே இப்படைப்பு பலரிடத்தில் ஏற்படுத்தியிருந்தது.

ஸோல்ஸனிட்ஸின் ஸ்டாலினிசத்தின் உற்பத்திப் பொருள். அதே காரணங்களுக்காக அவர் குருஷ்சேவிசத்தின் உற்பத்திப் பொருளுமாவார். நாற்பதுக்களில் தொடங்கி இன்னும் ஃபாஷன் மங்கிவிடாத விவாதத்துக்குரிய இந்த ஸ்டாலினிசம்தான் என்ன? கம்யூனிஸ்டுகள், கம்யூனிஸ்ட்—எதிர்ப்பாளர்கள் இருவகையினரும் கூறுவதைத் தவிர்த்து ஜீன்பால் ஸாத்ரே ஸ்டாலினிசம் பற்றிக் கூறுவதைக் கேட்கலாம்.

1917-ஆம் ஆண்டு ரஷ்யாவில் கம்யூனிஸ்ட் கட்சி அதிகாரத்துக்கு வந்தபோது நிலவிய பொருளாதார நிலைமைகளின் நேரடியான தவிர்க்கமுடியாத விளைவுதான் ஸ்டாலினிசம். ஒரு சிக்கலான தொழில்மய சமுதாயத்துக்குத் தேவையான மூலதனச் செல்வத் திரட்டல், மேலை நாடுகளில் பாட்டாளி வர்க்கத்தைக் கரடுமுரடான, திட்டமற்ற வகையில் சுரண்டுவதன் மூலம் பெறப்பட்டது. ஆனால் ரஷ்யாவிலோ மூலதனத்தின் ஆரம்பத் திரட்டலைக் கம்யூனிஸ்ட் கட்சிதான் செய்ய வேண்டியிருந்தது. அதற்காக ரஷ்யாவில் கொடுக்கப்பட்ட விலை மேலை நாடுகளினதைக் காட்டிலும் கொடூரம் குறைந்த ஒன்றுதான். ஆனால் அது உயர்ந்த விலை என்பதை மறுக்க முடியாது. ஒரு பிற்பட்ட நாட்டைத் தொழில்மயமாக்கவேண்டிய தேவையானது, துவக்ககால சோவியத் சமுதாயத்தில் ஓர் அடிப்படையான முரண்பாட்டை உருவாக்கியது. அது "சோசலிச நிர்மாணத்தின் அனுகூலங்கள், பாட்டாளிவர்க்கத்தின் உடனடியான நன்மைகள் ஆகியவற்றுக்கு இடையிலான முரண்பாடாகும்." தொழிலாளரின் உயர்ந்த வாழ்க்கைத் தரம் என்பது முதலாளிய நாடுகளில் புரட்சிக்கு முந்திய ஓர் அம்சமாகும். இவ்வுயர்ந்த வாழ்க்கைத் தரத்துக்கான கோரிக்கை, ரஷ்யாவின் சோசலிச நிர்மாணத்துக்கு இடையூறாக இருந்தது. ஏற்கனவே மிகவும் தொழில் மயமாகியிருந்த இங்கிலாந்து, ஜெர்மனி போன்ற நாடுகளில், புரட்சி ஏற்பட்டிருக்குமேயானால், இந்த ஆரம்பகால சோசலிச முரண்பாடு தோன்றியிருக்காது. ரஷ்யாவின் பிற்பட்ட தன்மை, சோசலிசத்தை நனவாக்கும் அந்த முதல் நாட்டில், இம் முரண்பாட்டைத் தவிர்க்க முடியாததாக்கிவிட்டது. இம்முரண்பாடானது சோவியத் சமுதாயத்தில், பல்வேறு மட்டங்களில், மீண்டும் தலைதூக்கியது. குறிப்பாக,

மலிவான உணவுக்கான தொழில்துறைப் பாட்டாளிகளின் கோரிக்கைகளுக்கும், அதிக விலையில் தம் உணவுப் பண்டங்களை விற்க விரும்பிய விவசாயிகளின் விருப்பங்களுக்கும் இடையிலான முரண்பாடாக உருவெடுத்தது. இந்த முரண்பாட்டைக் கட்டுப்படுத்த, ஓர் இறுக்கமான சர்வாதிகாரம் ஒன்றாலேயே முடியும். ஸ்டாலினின் ஒன்றிணைக்கும் ஆற்றல் கொண்ட ஆளுமை, கட்சி பயன்படுத்திய இறுக்கமான கட்டுப்பாடு இவையில்லாதிருந்தால், இம் முரண்பாடானது, சோசலிச நிர்மாணத்தைச் சாத்தியமற்றதாக்கியிருக்கும். சர்வாதிகாரப் பழக்கமானது, கட்சித் தலைவர்களை, பாட்டாளிவர்க்கத்தின் புரட்சிகர ஆர்வத்தைக் குறைத்து மதிப்பிடவும், அவ்வர்க்கத்தைத் தடிகொண்டோ அல்லது ஆசை காட்டியோதான் நடத்திச் செல்ல முடியும் என்று நினைக்கவும் வைத்தது. அது விதிவிலக்கான ஒரு சக்திவாய்ந்த நபரை உருவாக்கியது. அந்த நபர்தான் ஸ்டாலின். ஸ்டாலின் என்ற நபருக்குள், தொழிலாளியின் இருவேறு அம்சங்களுக்கு—அவன் தனி நபர் என்ற ஒரு அம்சம், அவன் சோசலிச நிர்மாணத்தின் ஒரு கூறு என்கிற மற்றொரு அம்சம்—இடையே உள்ள முரண்பாடு, கட்சி அதிகாரவர்க்கத்துக்கும் தொழில் நுணுக்கமறிந்தோருக்கும் இடையிலான முரண்பாடு, தொழிலாளிகளுக்கும் விவசாயிகளுக்கும் இடையிலான முரண்பாடு ஆகியவை மாயமான முறையில் தீர்வு பெற்றன. ஸ்டாலினிசம் சோசலிசத்திலிருந்து பாதை பிசகிய நிலையல்ல. மாறாக, சூழ்நிலைகளின் சக்தியால் திணிக்கப்பட்ட ஒரு சுற்றுப்பாதை ஸ்டாலினிசம் உருவாகக் காரணம் ரஷ்யா தொழிற்துறையில் பிற்போக்கானதாக இருந்தது மட்டுமல்ல, ரஷ்யப் புரட்சியின் உதாரணத்தைப் பின்பற்றித் தத்தம் நாடுகளில், முதலாளியத்தைத் தூக்கியெறிவதில், ஐரோப்பிய பாட்டாளிவர்க்கம் தவறியதுமாகும். ஓர் விரோத உலகத்தில், தனிமைப்படுத்தப்பட்ட சோவியத் யூனியன், முதலாளிய நாடுகளைப் பொறுத்தவரை, ஒரு சந்தேகம் நிறைந்த, விரோத நிலைபாட்டையே எடுக்கவேண்டியிருந்தது. அதேபோல, தொடர்ச்சியான "களையெடுப்புகள்" மூலம், கட்சியின் அதிகாரத்தை வரையறை செய்யவும், இரக்கமற்ற வழிமுறைகள் மூலம் எல்லா எதிர்ப்புகளையும் சமாளிக்கவும் வேண்டியிருந்தது. ஸாத்ரே கேட்கிறார் "இந்த இரத்தக்கறை படிந்த அரக்கனை சோசலிசம் என்று யாரேனும் அழைக்கலாமா? நான் வெளிப்படையாகச் சொல்வேன், 'ஆம்' என்று. அது ஆரம்பகட்ட சோசலிசம். வேறு சோசலிசம் அப்போது ஏதுமில்லை. ஒரு வேளை பிளாட்டோவின் "ஆதியந்தமற்ற சாராம்சங்கள்" (Eternal-Essences) மத்தியில் வேறுஏதாவது சோசலிசம் இருந்திருக்கலாம். இந்த சோசலிசம, அல்லது சோசலிசமே வேண்டாம் என்ற இரண்டில் ஒன்றைத்தான் தேர்ந்தெடுக்கவேண்டியிருந்தது."

ஸ்டாலினிசம் தோன்றுவதற்கான வரலாற்றுக் காரணங்களை ஸாத்ரே விளக்கியுள்ளதைப் பார்த்தோம். ஸ்டாலினின் தவறுகளுக்குக் காரணங்களில் சித்தாந்தத்தைப் புரிந்துகொண்ட முறையிலும், முரண்பாடுகளைக் கையாளுவதில் அவர் எடுத்துக்கொண்ட முறையிலும் தவறுகள் இருந்ததுமாகும். பாட்டாளி வர்க்கத்துக்கும் அதன் கட்சிக்கும் வெளியில் உள்ள எதிர்ப்புகளைச் சமாளிக்கப் பயன்படுத்த கத்தி, மக்களுக்குள்ளும் கட்சிக்குள்ளும் நிலவும் முரண்பாடுகளைத் தீர்க்க புத்தி என்று கருதாமல் இரண்டுக்கும் கத்தியையே நம்பினார். பொறுமை, நிதானம், அன்பு ஆகிய அம்சங்கள் அவரிடத்தில் போதிய அளவில் இல்லை. இவையுமே வரலாற்றுச் சூழ்நிலைகள் அவருக்கு மறுத்தவைதான். ஆயினும் ஸ்டாலினைத் தாக்குவதில் குறியாக இருக்கிறவர்கள் அனைவரும், ஸ்டாலினின் மகத்தான பணிகளை மறந்துவிடுவதுதான். மிகப் பிற்பட்ட ஒரு நாட்டில் சோசலிசப் பொருளாதார அடிப்படையை உருவாக்கியது, பாசிசத்துக்கு எதிரான வெற்றியில் ரஷ்யாவை இட்டுச் சென்றது முதலியவையாகும். ஸ்டாலின் "முரட்டுத்தனமான" நடவடிக்கைகளை எடுத்தார் என்றால், அது சொந்த லாபம் கருதியல்ல. பாட்டாளிவர்க்கத்தினதும் சோசலிசத்தினதும் நன்மைகளைக் காப்பாற்றியே தீரவேண்டும் என்ற ஒரு எண்ணத்தில், தனது சொந்த வாழ்வின் நலன்களைத் துறந்துவாழ்ந்தவர் அவர். வெளிநாட்டுப் பிரமுகர்களைச் சந்திக்கவேண்டிய நேரத்திலும், மிக முக்கியமான அரசு நிகழ்ச்சிகளில் கலந்து கொள்வதற்கான வேளையிலும் அணிந்து கொள்வதற்கான ஒரு கோட்டை அவர் 30 ஆண்டுகாலம் தொடர்ந்து பயன்படுத்தினார் என்ற ஒரு உண்மையே அவர் 'சர்வாதிகாரி'யாக இருந்த நேரத்தில் 'சந்நியாசி'யாகவும் வாழ்ந்தார் என்பதற்குச் சான்றாகும். ஸ்டாலினுடைய தவறுகள் எத்தகையதாக இருந்தாலும் அவை வரலாற்று ரீதியான படிப்பினையை நமக்குத் தருபவை. எதிர் மறையான உதாரணங்கள் என்ற வகையில் அவை சோசலிசவாதிகளுக்குப்பாடம் புகட்டுகின்றன. ஆனால் "ஸ்டாலினிசம்" என்ற பூச்சாண்டியை உயர்த்திப் பிடிப்பதன் மூலம், ஸ்டாலினிசம்தான் கம்யூனிசம் என்ற எண்ணத்தை உருவாக்குவதில் 'மாஜி கம்யூனிஸ்டு'களான பல எழுத்தாளர்கள் சளைக்காது உழைக்கிறார்கள். ஸ்டீபன் ஸ்பெண்டர், இக்னேஷியோ செலோன் முதலியோர் குறிப்பிடத்தக்கவர்கள். ஆல்பர்ட் காமு, லூயி பிஷர், கோய்ஸ்லர் ஆகியோரும் இதையே செய்தனர்.

கட்சிக்குள்ளும் மக்களிடையேயும் உள்ள முரண்பாடுகளைக் கையாளுவதில் பொறுமை, நிதானம், அன்பு ஆகியவற்றை ஸ்டாலின் கடைப்பிடிக்காததால், சுதந்திரமான விவாதமோ, கருத்துக்களோ வெளியே சொல்லப்பட வாய்ப்பில்லை. 'ஸ்டாலின்' நாமத்தை ஜபிப்பதே ஆபத்தில்லாத வழி என்ற நிலை உருவாகியது. இதை, பாட்டாளிவர்க்கம், சோசலிசம் ஆகியவற்றின் எதிரிகள் பயன்படுத்திக் கொண்டனர். சோவியத் சமுதாயத்தில் தொழில் மயமாக்குதல், விஞ்ஞானம், தொழில் நுணுக்கம் ஆகியவற்றுக்குத் தரப்பட்ட முக்கியத்துவம், தொழில் நுணுக்கவாதிகள், தொழிற்சாலை மேனேஜர்கள், விஞ்ஞானிகள், அரசாங்க அலுவலர்கள், கட்சித் தலைவர்கள் ஆகியோரை ஒரு புதிய அதிகாரவர்க்கத்தினராக ஆக்கிவிட்டது. இவர்களுடன் கூட்டுப் பண்ணை மானேஜர்களும் சேர்ந்து கொண்டார்கள். ஒரு சிகப்பு பூர்ஷ்வா வர்க்கம் உருவாகியது. அது அதிகாரத்தின் எல்லா மட்டங்களிலும் தனது ஸ்தானத்தை இறுகத் தங்கவைத்துக் கொண்டது. இச்சலுகை பெற்ற வர்க்கம் எதிர்ப்புகளைச் சமாளிக்க ஸ்டாலின் காலத்தில் ஸ்டாலின் பெயரையும், குருஷ்சேவ் காலத்தில் "தனி நபர் வழிபாட்டு எதிர்ப்பு" என்ற முழக்கத்தையும் கையாண்டது. சலுகை பெற்ற மற்றொரு சமூகப்பிரிவு, கலைஞர்களும், எழுத்தாளர்களுமாவர். சமுதாய உற்பத்திக்கான நடைமுறைச் செயல்களில் ஈடுபடாத இவர்கள் சோஷலிசத்தின் உண்மையான கர்த்தாக்களான பாட்டாளி மக்களைக் காட்டிலும் அதிக ஊதியமும் வசதியும், சலுகைகளும் பெற்றனர். இந்த ஒரு அம்சமே ஆண்ரே ஜீட்டுக்கு பெரும் ஏமாற்றம் தந்த ஒன்றாகும். (சோவியத் யூனியன் பயணக் கட்டுரைகள் - ஆண்ரே ஜீட்.)

குருஷ்சேவ் காலத்தில் ஸ்டாலினிசப் 'பனிக்கட்டி'யை உருக்குவதற்கு முயற்சிகள் எடுத்துக் கொள்ளப்பட்டன. ஸ்டாலின் சோஷலிஸத்தின் பொருளாதார அடிப்படையில் (economic base) மட்டுமே கவனம் செலுத்தி அதன்மேல் கட்டுமானமான (super structure) சிந்தனை, இலக்கியம், சித்தாந்தம் முதலியவற்றுக்குப் பெரும் சேதத்தை விளைவித்தார். குருஷ்சேவ் மேல்கட்டுமானத்திலிருந்த இறுக்கத்தைத் தளர்த்துவதாகச் சொல்லி வர்க்க விரோதிகளுக்கு இடம் கொடுத்து சோஷலிச அடிப்படைக்கே ஊறு விளைவித்தார். ஸ்டாலினிசத்தை எதிர்ப்பது என்ற பெயரில் புதிய அதிகாரவர்க்கத்தினர் உண்மையான சோசலிச லட்சியங்களை எதிர்த்தனர். இறந்த காலத்தின் தவறுகளுக்கெதிரான போராட்டம் மக்களின் போராட்டமாக இல்லாமல், மேலிருந்து இயக்கப்படும் போராட்டமாக இருந்தது. ஸ்டாலின், ஸ்டாலின் என்றார்களே தவிர, ஸ்டாலினின் "குற்றங்கள்" பகிரங்கமாக்கப்படவில்லை. எல்லாப் பழிகளும் ஸ்டாலின் மீது வீசப்பட்டன. ஸ்டாலினிசம் தோன்றியதற்கும் அதைத் தவிர்ப்பதற்குமான காரணங்கள் ஆராயப்படவில்லை. மாறாக, ஸ்டாலின் காலத்திலிருந்தே கட்சிக்குள் ஊடுருவிய வர்க்க எதிரிகளின் கரங்கள் வலுப் பெற்றன. இத்தகையவர்களே கட்சியின் அதிகாரத்தைக் கைப்பற்றினர். குருஷ்சேவ் பதவியேற்ற காலத்தில் நம்பிக்கையளிப்பதாக இருந்த ஒன்று, போகப்போக ஏமாற்றம் தரக்கூடியதாயிற்று. ஸ்டாலினசத்தை எதிர்ப்பது என்ற பெயரால் இவர்கள் சோசலிசத்தையும், உழைக்கும் மக்களையும் வஞ்சித்தார்கள். இருண்ட காலத்தின் கொடுமைகளிலிருந்து மக்களை விடுவிக்க வந்ததாகக் கூறிக்கொண்ட இவர்கள், தங்களது நோக்கங்களை நிறைவேற்றிக் கொள்ள பல வழிமுறைகளைப் பயன்படுத்தினார்கள். ஸ்டாலின் ஆண்ட இருண்ட காலத்தை அம்பலப்படுத்துவதாகச் சொன்னார்கள். அதற்காகவே ஸோல்ஸனிட்ஸினின் "ஐவான் டெனிசோவிச்சின் வாழ்வில் ஒருநாள்" என்ற நாவலையும் வெளியிட அனுமதித்தார்கள். ஆனால் ஒரு தவறு செய்தார்கள். ஸோல்ஸனிட்ஸின் ஸ்டாலின் உயிரோடு இருந்த காலத்தை மட்டும் சித்தரித்ததோடு நிற்கவில்லை. ஸ்டாலினுக்குப் பிறகு நிலைத்திருக்கும் குட்டி ஸ்டாலின்களை, அதிகாரவர்க்க மனப்பான்மையுள்ள சமூக விரோதிகளை அம்பலப்படுத்தத் தொடங்கினார். அதன் விளைவாகத் தோன்றியவைதான் "இலட்சியத்தின் நன்மைக்காக" முதலிய சிறுகதைகள்.

ஸோல்ஸனிட்ஸின் எந்த ஒரு மனிதனும் அனுபவிக்கக்கூடிய உயர்ந்தபட்சக் கொடுமைகளை அனுபவித்தவர் | போர், சிறைவாசம், புற்றுநோய். குருஷ்சேவ் காலத்தில் அடிவானத்தில் தோன்றிய நம்பிக்கை நட்சத்திரம் ஏளனம் காட்டி மறைந்துவிட்டது. புதிய அதிகாரவர்க்கத்தினருடன் சேர்ந்து சலுகை பெற்றுவிட்ட எழுத்தாளர் கூட்டம் அவரை நிராகரித்து விட்டது. புதிய சோவியத் சிகப்பு பூர்ஷ்வா வர்க்கத்தை எதிர்ப்பதற்கான ஒரு முறையான சித்தாந்த வார்ப்பு பெற்ற அமைப்பு தோன்ற வழியில்லாத நிலையில், எதிர்ப்பாளர்கள் தனித்தனியான கலகக்காரர்களாகச் சிதறிப்போன நிலையில், ஸோல்ஸனிட்ஸின் தனிமைப்பட்டுப் போனார். வெளியுலகம் அவருக்கு மறுக்கப்பட்டது. தனிமைத் தவத்தில் சிக்குண்டதும், அவருடைய எதிரிகள், சோசலிசத்தின் மீது நம்பிக்கை கொண்ட உழைக்கும் மக்களை நம்பவைப்பதற்காக அவர்மீது சாட்டிய குற்றச்சாட்டுகளுக்கு உரியவரானார். ஸ்தூலமான உலகிலிருந்து துண்டிக்கப்பட்ட அவர், ஸ்தூலமான ஆராய்வைக் கைவிட்டு, சூட்சுமமான கருத்தமைப்பு

களைச் சிந்தித்துத் தியானிப்பதில் இறங்கி விட்டார்.

நன்மை, தீமை பற்றிய பிரச்சினைகளில் ஸ்தூலமான ஆராய்வை மேற்கொள்வதற்குப் பதிலாக, காலம், இடம் இவற்றுக்கு அப்பாற்பட்ட, முக்காலத்துக்கும் பொருந்தக்கூடிய அருபமான கருத்துக்களை ஸோல்ஸனிட்ஸின் உருவாக்குகிறார் என்பதற்கு அவரது "மாட்ரியோனாவின் இல்லம்" என்ற கதையில் ஆதாரம் உண்டு. மாட்ரியோனா மற்றவர்களுக்குச் சேவை செய்ய தன்னையே அர்ப்பணிக்கும் மாது. பிரதியுபகாரம் எதிர்பாராது தன் உடைமைகளையெல்லாம் மற்றவர்களுக்கு வாரி வழங்குகிறாள். வாய்மையே உருவானவள் அவள். ரஷ்ய கிராமங்கள், நகரங்கள் ஆகியவற்றின் ஆன்மா. இந்த உலகத்தின் முதுகெலும்பு அவள். கிறிஸ்துவ சமயம் உபதேசிக்கும் அறநெறிகளின் மொத்த உருவம். தனி மனிதப் பண்பாடு அனைத்தும் அவளிடத்தில் அடைக்கலம். அவளைப் பின்பற்றுவதே உலகம் உய்யவழி!

தஸ்தாவஸ்கி தன்னைத்தானே துன்புறுத்திக் கொண்டு புரட்சியை இகழ்ந்து வந்ததைப் பார்க்கும்போது, அவர் எத்தகைய பிற்போக்கு 'ரொமாண்டிக்' இருட்டுத் தத்துவவாதி என்று சீக்கிரம் முடிவு கட்டிவிடலாம். ஆனால் சுரண்டல் சமுதாய அமைப்பினால் அவமானப்பட்டுச் சிதைக்கப்பட்ட மக்களின் துயரங்களையும் வேதனைகளையும் படம் பிடித்துக் காட்டியவன் என்ற வகையில் அவன் ஒரு மேதை. ஸோல்ஸனிட்ஸினுக்கும் இதே மாதிரியான தீர்ப்பை வழங்கமுடியும்—புதிய சில மாற்றங்களோடு. சோவியத் சமுதாயத்தில் தோன்றியுள்ள சில வக்கிரமான போக்குகளைக் கண்டித்து வந்த இவர், உண்மையான சோசலிச இலட்சியங்களை, அவற்றை நிறைவேற்றுவதற்கான போராட்டங்களை ஆதரிப்பவர் என்ற நம்பிக்கை பல மார்க்சீய வாதிகளிடம் இருந்து வந்தது. ஆனால் அந்த நம்பிக்கையை அவரது நோபல் உரை (கசடதபற—அக்டோபர் 72 இதழில் வெளிவந்துள்ளது) தகர்த்தெறிந்து விட்டது.

ஸோல்ஸனிட்ஸினின் நோபல் உரை நமக்குத் தெரிவிப்பதென்ன? உலகில் இன்றுள்ள அரசியல் அமைப்புகள் அனைத்தும போலியானவை; அரசியல்வாதிகள் அனைவரும் பொய்யர்கள், வஞ்சகர்கள்; ஒரு சமூகத் திட்டத்தை அல்லது தத்துவ அமைப்பை ஒரு தவறின் அடிப்படையிலோ அல்லது ஒரு பொய்யின் அடிப்படையிலோ உருவாக்க முடியும். உலகில் எந்த நாட்டிலும் மனிதனுக்கு முழுச் சுதந்திரம் இல்லை. ஒவ்வொரு நாடும் தன் சுயநல நோக்கு கருதியே செயல்படுகிறது. இன்றைய உலகின் இளைஞர்கள் பெரும்பாலோர் உடலின்பத்தைத் தவிர் வேறெதையும் அனுபவித்திராதவர்கள். இவர்கள் நாகரிகத்தை உலுக்கிச் சிதைக்கிறார்கள். உலக மக்களை ஒன்றிணைப்பது இலக்கியம் (கலை) ஒன்றுக்கே சாத்தியம். வன்முறை பொய்மையுடன் பிணைந்தது, இத்யாதி, இத்யாதி.

"மாற்றம் இல்லாத, எல்லா இடங்களுக்கும் பொருந்தும் நன்மை, தீமை என்று ஏதும் இல்லை; அவை எல்லாம் நிலையில்லாமல் ஏற்றத் தாழ்வுகளுடன் கூடியவை என்று நம்முன் பறையடிக்கிறது. எது உன் கட்சிக்கு லாபகரமானதோ அதையே எப்போதும் செய் என்பதுதான் நியதி" சந்தர்ப்பவாதிகளைத் தாக்குவதற்கு மட்டுமா ஸோல்ஸனிட்ஸின் இதைச் சொல்கிறார்? அல்லது முக்காலத்துக்கும் பொருந்தக்கூடிய உண்மைகள் உள்ளன, அவை கிறிஸ்து சொன்ன உபதேசங்கள், முன்பு தாஸ்தாவஸ்கியாலும், பிறகு டால்ஸ்டாயாலும், இப்போது ஸோல்ஸனிட்ஸினிலும் உபதேசிக்கப்படும் உண்மைகள்தான் அவை என்று வாதிடுகிறாரா? சரியானபடி ஆராய்ந்தால், மோசசின் பத்து கட்டளைகளில் ஏழு கட்டளைகளாவது இக்காலத்தில் கடைப்பிடிக்க முடியாதவை என்று உணரமுடியும். "நீ பிறர் பொருளைக் கையாடாதே", "பிறரைக் கொல்லாதே" என்பவை முதலாளிக்கும், அந்நிய நாட்டு ஆக்கிரமிப்பாளனுக்கும் பொருந்துமா? பூனைக்கும் எலிக்கும் பொருந்தக் கூடிய ஒரு அறம் உண்டா? கசாப்புக் கடைக்காரனுக்கும் வெள்ளாட்டுக்கும் ஒரே உபதேசம் பொருந்துமா? புளியேப்பக்காரனுக்கும், பசியேப்பக்காரனுக்கும் "போதுமென்ற மனமே பொன் செய்யும் மருந்து" என்ற நீதி பொருந்துமா?

ஸோல்ஸனிட்ஸின், ஜார்ஜ் ஆர்வல், ஆல்பர்ட் காமு போன்ற 'மகான்'களைத் தம் வாதங்களுக்காகச் சேர்த்துக் கொள்கிறார். ரஷ்ய வரலாற்றில் வருந்தத்தக்க நிகழ்ச்சிகளைப் பயன்படுத்திக்கொண்டு சோசலிச லட்சியத்தையே எதிர்த்தவர் ஆர்வல், சோசலிசம் என்றாலே அடக்குமுறை, வன்முறை என்று பிரச்சாரம் செய்பவர் அவர். ஜார்ஜ் ஆர்வெலின் பிரசித்தி பெற்ற படைப்பு "1984" என்ற நாவல். இதில் தனது சிறுபிள்ளைத்தனமான கற்பனையில் ஒரு வர்க்கமற்ற சமுதாயத்தைச் சித்தரிக்கிறார். காப்கா, மனிதனைக் கரப்பான் பூச்சியாக மாற்றியதைப் பின்பற்றி, மனிதர்களைப் பன்றிக் கூடுகளில் வாழ்பவர்களாகச் சித்தரிக்கிறார் ஆர்வல். இவரது வர்க்க பேதமற்ற சமுதாயத்தில் அறநெறிகள், ஒழுக்கம், தர்மம் அனைத்தும் ஒழிக்கப்பட்டுவிட்டன. அவரதுத் கம்யூனிச விரோதக் கதாநாயகனே, தம்மைச் சார்ந்திருப்போரின் இலட்சியத்துக்காகத்

தேவைப்பட்டால், ஒரு குழந்தையின் முகத்தின் மீது கந்தக அமிலம் வீசவும் தயார் என்கிறன். ஆர்வலின் கற்பனையில் நாம் வேறு என்ன எதிர்பார்க்க முடியும். பிரிட்டிஷ் ஏகாதிபத்தியப் போலீசுக்காக இந்தியாவில் பணியாற்றிய ஜார்ஜ் ஆர்வெல், ஸோல்ஸனிட்ஸினின் கண்களுக்கு உலகில் 'தகவல் ஒடுக்கப்படும்' போக்கைக் கண்டித்த லட்சிய புருஷனாகக் காணப்படுகிருர்!

ஸோல்ஸனிட்ஸின் நாடித் தழுவும் மற்ருெரு மகான் ஆல்பர்ட் காமு. இவர் உபதேசித்த தத்துவம் பிரபஞ்சமே அறிவற்றது (cosmic absurdity). சமுதாய ரீதியான பாதுகாப்பின்மை, தனி நபர் சமுதாய ரீதியில் தனிமைப்படுதல் இவற்றின் சுய உணர்வு காரணமாக 19-ஆம் நூற்ருண்டில் எழுந்த தத்துவம் இது. ஷோப்பன்ஹிர், ஸ்டிர்னர் போன்றவர்களால் உபதேசிக்கப்பட்டது. இவர்கள் கூறிய கபடத்தனமான இரக்கம், அனுதாபம் இவற்றின் நேரெதிர் விளைவாக நீட்ஷே தோன்றினர். இவ்விரண்டு போக்குகளையும் ஸ்வீகரித்தவர் ஆல்பர்ட் காமு. இவரது கருத்துப்படி, பிரபஞ்சம் அறிவற்றது. தத்துவவாதிகளின் ஒரே பிரச்சினை "தற்கொலை"தான். ஆனல் மனிதன் மட்டுமே இம் மடமைப் பிரபஞ்சத்தின் ஒரே அறிவார்த்தப் (rational) பொருளாக இருப்பதால் தற்கொலையைத் தவிர்க்க வேண்டியிருக்கிறது. வாழ்வு பொருளற்றது. மனிதனின் செயல்களுக்கு நோக்கமே இல்லை. மனிதன் எப்போதும் மடமை நிறைந்த சூழ்நிலைகளை—பொருமை, சுயநலம், பேராசை போன்றவற்றையே எதிர் நோக்குகிருன். இவையே இம்மகானின் தத்துவ உபதேசம். பிரெஞ்சு அல்ஜீரியாவில் பிறந்த காமு, கடைசி வரைக்கும் அல்ஜீரியா பிரான்ஸிலிருந்து விடுதலை பெறுவதை விரும்பவில்லை. பிரெஞ்சுப் பிற்போக்குவாதிகளின் பாசிச, குரூரத்தனமான வன்முறைக்கெதிராகப் புரட்சிகரமான வன்முறையைக் கடைப்பிடித்த அல்ஜீரிய மக்களைக் கண்டித்தவர் காமு. தனது கதைகளில்கூட, அரபுக்குடிமகனுக்கு பெயரோ, தனித்துவமோ, முகமோ இருப்பதைத் தவிர்த்தவர் காமு. அந்நியன் (Stranger), விருந்தாளி (Guest) முதலிய கதைகளைப் படிப்பவர்களுக்கு இது புரியும். அவரது பிரான்ஸ், ஜெர்மன் முற்றுகைக்கு ஆளான சமயம், விடுதலைக்காக வன்முறையை ஒப்புக்கொண்ட காமு, காலனி விஷயத்தில் வேறுவிதமாக நடந்து கொண்டார். ஒரு பிரெஞ்சுக்காரர் என்ற முறையில் தனது சகபிரெஞ்சுககாரர்கள் காலனி மக்களுக்கு இழைத்த அட்டூழியத்துக்குப் பொறுப்பேற்கும் நேர்மையை உதறித் தள்ளி, தனக்குச் சம்பந்தமில்லாத ஒரு நாட்டில்—சோவியத் யூனியனில்—உள்ள சிறை முகாம்களுக்கெதிராகக்கூச்சலிட்டார். புறநிலை நோக்கில், பிரான்சின் பிற்போக்குத்தனமான வன்முறைக்கு ஓர் ஆதரவாளராகத்தான் விளங்கினர் காமு. காமுவையும், ஆர்வெல்லையும், வன்முறையைப் பொய்மையாகக் காணும் சோல்ஸனிட்சின் துணைக்கழைப்பது வருந்தத்தக்கதும், வேடிக்கையானதுமான ஓர் விஷயமாகும்.

ஸோல்ஸனிட்ஸனின் மற்ருெரு குற்றச்சாட்டு: பிளவுற்றுக் கிடக்கும் இவ்வுலகில் ஒரு பகுதியில் நடக்கும் பேரழிவு மற்ருேர் பகுதியில் நடக்கும் சிறிய விபத்தைக் காட்டிலும் குறைந்த முக்கியத்துவம் வாய்ந்ததாகக் காணப்படுகிறது. "தொலைவில் இருக்கும் எதையும் அதன் முனகல்களுடன், அடக்கிய கூக்குரலுடன், அழிக்கப்பட்ட உயிர்களுடன், அதில் பல மில்லியன் உயிர்கள் சம்பந்தப்பட்டிருப்பினும், நம் வீட்டை ஆக்கிரமித்துக் கொள்ள பயமுறுத்தாதவரை, மிகவும் பொறுத்துக் கொள்ளக் கூடியதாகவும், சகித்துக் கொள்ளக்கூடியதாகவும் கருதுகிருேம்." இதை யாருக்காகச் சொல்கிருர்? மனித குலம் கூறுபட்டுக் கிடப்பதற்கு யார் காரணம் என்கிருர்? விதிப்பயனு? ஆண்டவனின் சித்தமா, அல்லது புறநிலைக் காரணங்களா? இன்றைய உலகில் ஓர் பகுதியில் ஏற்படும் துயரத்துக்கு வருந்தவும், அனுதாபப்படவும், உதவவும், கம்யூனிச உணர்வுபெற்ற உழைக்கும் வர்க்கத்துக்கு மட்டுமே இயலும். புரட்சிவெற்றி பெற்ற நாடுகளிலுள்ள பாட்டாளிவர்க்கம் சர்வதேசக் கடமையாகக் கருதி சில உதவிகளைச் செய்யலாம். ஆனல் தளைபட்டுக் கிடக்கும் மற்ருெரு நாட்டின் உழைக்கும் மக்களுக்குத் தங்கத் தட்டில் வைத்து விடுதலையை, விமோசனத்தை வழங்கமுடியாது. அவரவர் விடுதலையை அவரவரேதான் தேடிக்கொள்ள வேண்டும். உலகம் முழுவதிலும் "இரக்க சிந்தனை" நிறைந்த மனிதனைக் காலம்தான் உருவாக்கவேண்டும். உலக நாடுகளெல்லாம் சுரண்டல் பிசாசுகளைத் தூக்கியெறிந்த பிறகே இது சாத்தியமாகும். "நீ உன்னை நேசிப்பது போலவே உன் அண்டை வீட்டானையும் நேசி" என்ற கட்டளை, வர்க்க சமுதாயத்தில், போட்டியும், பொருமையும் மலிந்த சூழ்நிலையில் சாத்தியமாகாது. "தன்னை நேசிப்பது" என்பது வேண்டுமானல் சிறந்த கோட்பாடாகலாம். உலக மக்களின் துயரம் பற்றிப் பேசும் ஸோல்ஸனிட்ஸின், மனிதாபிமானத்துக்குச் சவாலாக விளங்கும், வியத்நாமில் அமெரிக்கப் பேய்கள் இழைக்கும் கொடுமைகளைப்பற்றி ஒரு வார்த்தைகூடப் பேசாமலிருப்பது ஏன்?

ஸோல்சனிட்சனைப் பொறுத்தவரை, இனப்பூசல் பாமரர்களின் போராட்டம், தொழிற்சங்கத் தகராறு, வர்க்கப்போராட்டம் ஆகியவை காலப்போக்கில் மரியாதைக்குரிய

சொற்களாக மாறிவிட்ட பேராசை, பொறுமை கட்டுப்பாடின்மை, பரஸ்பரதுவேஷம் முதலிய குகைக்கால உணர்ச்சிகளாம். வர்க்கப் போராட்டத்தைத் தூண்டிவிடுவது யார்? "குகைக் கால மனிதர்களான'' முதலாளிகள், நிலக்கிழார்கள், ஏகாதிபத்தியவாதிகள் ஆகியோர்தானே. இவர்கள் தமது பிற்போக்கு வன்முறையின் மூலம் தம் சுரண்டலையும், உலகாதிக்கத்தையும் பாதுகாக்கின்றனர். இவர்களைப் புரட்சிகரமான வன்முறையல்லாது வேறு எவ்வழியில் தூக்கியெறியமுடியும். "அடிமைப்பட்டு விலங்காகியிருக்கும் மனிதன் புரட்சிகர வன்முறையின் மூலமே புனித மடைகின்றான். தன்னை மனிதன் என்று உறுதிப்படுத்திக் கொள்கிறான்'' என்கிறார் சாத்ரே. தவிர்க்க இயலாதபடி வன்முறையைக் கையாளுமாறு நிர்ப்பந்திக்கப்பட்ட மக்களிடம் சாத்வீகத்தை உபதேசித்தார் டால்ஸ்டாய். அவருக்குக் கார்க்கி தந்த பதிலின் ஒரு பகுதியை இங்கே தருவது பயனுள்ளதாக இருக்கும்.

"மனித ஆற்றலின் மாண்பை அறிந்து, மனித உரிமைகளை மதிக்கவேண்டுமென்று அறைகூவல் விடுக்கின்ற மக்களை அழித்து ஒழித்துவிட வேண்டும் என்ற ஆசையின் காரணமாக, ஒரு கூட்டத்தைச் சேர்ந்தவர்கள் மீது மற்றொரு கூட்டத்தை மோதவிட்டு, அங்கு ஒரு கூட்டுக் கொலையை உருவாக்கிக் காட்டுகிற புரட்டர்களும் போலிகளும் வாழ்கின்ற அதே நாட்டில், தானும் வாழ்வதை அறிந்து கொள்கிற ஒருவனால், தன் உள்ளத்தில் ஊறியிருக்கும் சினத்தையும், பழிவாங்கும் உணர்ச்சியையும் எப்படித்தான் வெல்ல முடியும்?

...தன்னுடைய குணங்களைப் பண்படுத்திக் கொள்கிற பணியில் தன்னைத்தானே ஈடுபடுத்திக் கொள்கிற மனிதன், தன்னுடைய நாடு இத்தகைய கடுந்துன்பத்தைக் கடந்து தீர வேண்டிய நிலையைக் காணும்போது, இந்த நேரத்திலும் "உண்மை, அழகு, விடுதலை'' என்னும் வரட்டு தத்துவங்களைப் போற்றித் திரிபவர்களைப் பற்றி என்ன நினைப்பான்?

"இவர்கள் இதயமற்ற ஆசாரக் கள்ளர்கள், குரூர எண்ணம் கொண்ட குதர்க்க வாதிகள் என்றுதானே எண்ணுவான்''

மதத்தின் பெயரால், 'மனிதாபிமான'த்தின் பெயரால், நபும்சகத்தனமான உபதேசங்களை முழக்கி மானுடத்தின் விடுதலைக்கான போராட்டத்துக்கெதிராகக் கையை விரித்துக்கொண்டு நின்ற 'பெரியவர்களை'க் காலவெள்ளம் ஏளனத்தோடு புறக்கணித்துச் சென்று விட்டது.

இரஷ்ய போல்ஷ்விக்குகளையும், சீன விவசாயப் போராளிகளையும். வியத்நாம் வீரர்களையும், உலகில் விடுதலைக்காகப் போராடும் புரட்சியாளர் அனைவரையும் உலகிலுள்ள பிற்போக்கு வாதிகள் அனைவரும், கொள்ளைக்காரர்கள் என்றே பெயரிட்டு வந்தனர். சோல்ஸனிட்ஸின் இக் கும்பலில் புதிய உறுப்பினராகச் சேர்கிறார். "வழிப்பறி, தீ, குண்டெறிதல் இவற்றின் மூலம் நாகரிகத்தை உலுக்கி அழித்துவிடத் தங்கள் தீர்மானத்தை அறிவித்து விட்டன. ஒரு வேளை அவை வெற்றிபெறக் கூடும். உடலின்பத்தைத் தவிர வேறெந்த அனுபவங்களையும் பெறாத இளைஞர்கள்'' என்று புலம்புகிறார் ஸோல்ஸனிட்ஸின்.

சுதந்திரம், சமாதானம் ஆகியவற்றுக்காக உலக மக்களின் படையாகத் திகழும் வியட்நாமிய இளைஞர்கள், பழைமைக்கு எதிராகக் கிளர்ந்தெழும் மேற்கு ஐரோப்பிய இளைஞர்கள், தங்களை மனிதர்களாக உறுதி செய்து கொள்ளப்போராடும் அமெரிக்கக் கறுப்பர்கள், லத்தீன் அமெரிக்காவிலே கொள்ளைச் சுரண்டலுக்கு எதிராகக் கிளம்பியுள்ள புரட்சிகர மக்கள், ஸயோனிசத்துக்கெதிராகச் சாவை எதிர் கொண்டழைக்கும் அரபு இளைஞர்கள் ஆகியோர் "உடலின்பத்தைத் தவிர வேறெந்த அனுபவங்களையும் பெறாத இளைஞர்கள்'' இதைக் காட்டிலும் பொய்மையும் வஞ்சகமும், அரக்கத்தனமும் நிறைந்த கூற்றை வேறு யாரேனும் சொல்லியிருக்கிறார்களா? இவர்கள் "நாகரிகத்தை உலுக்கி அழித்துவிடத்'' தீர்மானித்துள்ளார்களாம். ஆம்! மைலாய் நாகரிகத்தைப் பூண்டோடு அழிப்பார்கள்.

சீனச் செங்காவலரின் சமீப காலத்திய சிறுமையைச் சிறந்த உதாரணம் என்று இவ் விளைஞர்கள் கொண்டாடுகிறார்கள் என்று சோல்சனிட்ஸின் குற்றம் சாட்டுகிறார். இதில் என்ன தவறு? உலகில் நடக்கும் கொந்தளிப்புகளையும், அதன் காரணங்களையும் காண விரும்பாமல் கண்களை மூடிக்கொண்டு, மோனத் தவத்திலிறங்கி அன்பு, தியாகம் முதலிய அருங்குணங்களைப் போதிக்கிறார்களே இந்த இலக்கிய முனிவர்கள், இவர்களது தத்துவங்கள சாதிகக இயலாததை, செங்காவலர்கள் சாதித்தார்கள். 'நான் என்னும் அகங்காரம் சிறிதுமின்றி, மக்களுக்காக உன்னை அர்ப்பணம் செய்'' என்பதுவே அவர்களின் முக்கிய கோஷம். அதிகாரத்தைப் பயன்படுத்தி, செங்கொடியைக் கையிலேந்தி, சுரண்டல் பாதையைப் பின்பற்றிய கபடவேடதாரிகளை அம்பலப்படுத்தினர்கள். சிறந்த அறக் கோட்பாடுகளின் உருவங்கள் என்றும், எவாஞ்சலிகல் ப்யூரிட்டன்கள் என்றும் அவர்களை ஆச்சாரிய வினோபா, ஜான் கிட்டிங்ஸ் போன்றவர்களே புகழ்ந்திருக்கிறார்கள். செங்காவலரது செயல்கள் சில "அத்து மீறியவை'' என்பதையும் யாரும் மறுக்கவேண்டியதில்லை. அவர்கள் பல இடதுசாரி சந்தர்ப்பவாதத் தவறுகளைச் செய்தார்கள். தஸ்தாவஸ்கி, டால்ஸ்டாய், ஷேக்ஸ்பியர் போன்றோரின் நூல்களைக் கொளுத்தினர்கள் என்பதும் உண்மைதான். அவர்களது போராட்டம் வர்க்கப் போராட்டமாகும். அது மென்மையானதாகவோ, பெருந்தன்மை கொண்டதாகவோ இருந்திருக்க முடியாது. அவர்கள் ரோம் தீப்பற்றி எரியும்போது பிடில் வாசித்த நீரோ மன்னர்களல்ல. நீட்சேயின் கண்ணுக்கு மட்டுமே நீரோ மன்னன் சுத்தக் கலைஞன். தீயில் கருகும் மனிதர்களுக்கு அவன் ஒரு காட்டுமிராண்டி. செங்காவலருக்கு

மனிதன்தான் முக்கியம். பிரபஞ்சத்தின் அச்சாக மனிதன் இருக்கிறன் என்று அவர்கள் நம்புகிறர்கள். இலக்கியத்தைப் பூஜை செய்வதற்கு முன், மனிதனை சுத்தப்படுத்தவும், இப் பூஜையைச் செய்வதற்காக அவனை முதலில் வாழவைக்கவும் விரும்புகிறர்கள். இந்த வாழ்க்கைக்காக அவன் வர்க்கப் போராட்டம் நடத்தவேண்டும் என்பதை உணர்த்துகிறர்கள்...

ஸோல்சனிட்ஸின் 'வன்முறை'யை ஒட்டு மொத்தமாகச் சாடுகிறர். 'வன்முறை' பொய்மையுடன் பிணைந்தது என்கிறர். வன்முறையின் பலகீனம் வரலாற்றல் பன்முறை நிருபிக்கப்பட்டுள்ளது என்கிறர். வாஸ்வதந்தான். நீண்ட காலமாகவே, வன்முறை, அரசர்கள், நிலக்கிழார்கள், மதகுருமார்கள் என்ற பொய்மையுடன் பிணைக்கப்பட்டிருந்தது. நிகழ்காலத்திலேயும் அது சுரண்டும் வர்க்கம் என்கிற பொய்மையோடு பிணைக்கப்பட்டுள்ளது. ஆனல் உழைக்கும் மக்களின் கரங்களுக்கு அது வந்ததும் தூய்மையடைகிறது. அது வாய்மையாகிறது. அநீதிக்கும் விகாரத்துக்குமெதிராக தேவைப்பட்டால் வாளை உருவு என்கிறது கீதை. பாரதமும் இராமாயணமும் இதையே வற்புறுத்துகின்றன. காஷ்மீர் பிரச்சினையின் போதும், உலகப் போர்களின் போதும் காந்தியாரே 'வன்முறை'யை ஒப்புக்கொண்டார். பைபிளிலும் நியாயமான 'வன்முறை'க்கு ஆதாரம் உண்டு. ஜெர்மனிக்கெதிரான பிரெஞ்சு எதிர்ப்புப் போராட்டத்தில், ஆல்பர்ட் காமு, வன்முறையை ஆதரித்தார். ஒரு அருபமான 'வன்முறை'யுடன் சண்டையிடும் ஸோல்சனிட்ஸின் குழந்தையா, கோமாளியா.

ரஷ்யாவில் ஆர்த்தடாக்ஸ் கிறிஸ்துவச் சமயப் பிரிவைப் பின்பற்றுபவர்கள் இன்னும் ஏராளமாக இருக்கிறர்களாம். அவர்களுக்குக் கிறிஸ்துவத் துறவிகளின் உருவப் பொம்மைகளை (icons) தம் இல்லங்களில் வைத்துக் கொள்வதில் அளவு கடந்த நம்பிக்கையாம். மிக விரைவில் புனித ஸோல்சனிட்ஸின் என்ற துறவியின் பொம்மை அவர்களது இல்லங்களை அலங்கரிப்பதாக.. ஆமென்!

ஸோல்சனிட்ஸின், அண்மையில், இங்கிலாந்திலும் அமெரிக்காவிலும ஒரே சமயத்தில் பிரசுரமான "ஆகஸ்ட் 1914" என்ற நாவலின் மூலம் தனது 'புகழை'ப் பெருக்கிக்கொண்டுள்ளார். அவருக்கு 1917 அக்டோபர் புரட்சிக்கு முந்திய ரஷ்ய வரலாற்றை ஆராய்வது நீண்ட கால விருப்பமாம். அவ்வாராய்ச்சிக்கு வேண்டிய ஆதாரச்சுவடிகளை ஆராய அனுமதி மறுக்கப்பட்டதாம். இவ்வாராய்ச்சி செய்வதில் அவருக்கு ஏன் அத்தனை ஆர்வம் என்பதை "ஆகஸ்ட் 1914' நாவலை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்துள்ள மைக்கேல் க்ளென்னி கூறுகிறர்: "ஜார் நிக்கோலஸ் முதலாம் உலகப் போரில், ஜெர்மனியோடு ரஷ்யாவை யுத்தத்தில் ஈடுபடுத்தியைத் தவிர்த்திருந்தால், 1917 அக்டோபர் புரட்சியே ஏற்பட்டிருக்காது."

மார்க்சீயத்தின் பெருமை வரலாற்றின் புறநிலை விதிகளையும் வரலாற்றின் ஊக்கும் சக்திகளையும் அறிந்து கொள்வதுதான், அவ்வறிவொன்றே சமுதாயத்தில் மாற்றம் விளைவிப்பதைச் சாத்தியமாக்கும். இந்த மார்க்சீயமே மனிதகுல வரலாற்றின் தலைசிறந்த சிந்தனையாளர்கள் எழுப்பிய கேள்விகளுக்குப் பதில் கூறுமுகத்தான் உருவானதாகும். அது வரலாற்றில் பூர்ஷ்வா சமுதாயமும் பாட்டாளி வர்க்கமும் உருப்பெற்ற காலத்தில்தான் தோன்றியது. அது திட்டவட்டமான நிலைகளைத் திட்டவட்டமாக ஆராய்கிறது. மாருக மானசீகமான கற்பனைகளைக் கொண்டு ஆகாயத்தில் கோட்டை கட்ட நினைப்பதில்லை. முதலாளியம் ஏகாதிபத்தியமாக வளர்ந்து உலகில் ஏற்றத் தாழ்வான சீரற்ற வளர்ச்சியை ஏற்படுத்தியதைப் புரிந்து, ஏகாதிபத்தியதச் சங்கிலியின் பலகீனமான கண்ணியை உடைத்தெறிவதின் மூலம் தன்னந்தனி நாட்டில் சோசலிசப் புரட்சியை உருவாக்க முடியும் என்பது மார்க்சீயம் லெனினியமாக வளர்ந்த வரலாருகும். ஒரு இயற்கை விஞ்ஞானியின் நுண்மையுடன் நிருபித்தவர் லெனின். ஒரு நாட்டில் புரட்சியைத் தீர்மானிப்பது உள்நாட்டு முரண்பாடுகளே. அதற்கு வெளியே உள்ள முரண்பாடுகள் புரட்சிகரச் செயல்களின் மீது செல்வாக்கு மட்டுமே செலுத்தமுடியும். முதலாளியம், ஏகாதிபத்தியமாக உருவானதும், ஜார் நிக்கோலஸ் ஜெர்மனியோடு யுத்தத்துக்குக் கிளம்பியதும், தவிர்க்கமுடியாத முதலாளிய நெருக்கடியின் விளைவாகும். அதுபோலவே 1917 அக்டோபர் புரட்சி ஏற்பட்டதும் வரலாற்றின் தவிர்க்கமுடியாத தேவையாகும் (necessity). ரஷ்யாவில் ஜார் நிக்கோலஸின் தலைமையிலிருந்த பிற்போக்குச் சுரண்டும் வர்க்கங்களுக்கும் உழைக்கும் மக்களுக்குமிடையே இருந்த முரண்பாடு கூர்மையடைந்து இருந்ததால்தான் புரட்சி சாத்தியமாகியது. இந்த முரண்பாடே புரட்சியைத்தீர்மானிததது. ஜார் மன்னன் ஜெர்மனியோடு மோதிய அம்சம், புரட்சிக்குச் சாதகமாக இருந்த, செல்வாக்கு செலுத்திய ஒன்று. அவ்வளவுதான்.

ஸோல்சனிட்சனின் "ஜார் மன்னன் போரில் ஈடுபடாமலிருந்திருந்தால்..." என்ற வாதத்தை, தர்க்கரீதியாக, விஸ்தரித்துக் கொண்டே போனல் எஞ்சுவது "இயற்கையில் பரிணாம வளர்ச்சி நிகழாதிருந்தால், மனிதன் தோன்றியிருக்கவே மாட்டான். அப்போது சமுதாயமே தோன்றியிராது. பிரச்சினைகளும் தோன்றியிரா. லெனின், ஸ்டாலின, ஸோல்சனிட்ஸின், நோபல் பரிசு ஒன்றுமே தோன்றியிரா." ஸோல்சனிட்ஸினின் சிந்தனைக்குச் சூட்டப்படக்கூடிய ஒரே பெயர், "wishful-thinking."

ஒருவழியாகக் கதையை எழுதிமுடித்து விட்டேன்; எங்கே போட்டி என்றாலும், கதை எழுதி, எழுதி அனுப்பி எனக்கு இதே பழக்கமாகிவிட்டது. இதை என்னால் நிறுத்தவே முடியவில்லை. கதையை மடித்துக் கவருக்குள் போட்டு ஒட்டினேன். முகவரியை எழுதிவிடலாமா என்று அரைக்கணம் யோசித்தேன். விட்டுவிட்டேன். முகவரி எழுதிவிட்டால் போகிற வழியில் இருப்பவர்கள் யாராவது பார்த்து விடுவார்களோ என்னவோ?

வீட்டு வாசலிலே நின்றுகொண்டு தெருவிற்கு எத்தனைபேர் வருகிறார்கள், தெருவிலிருந்து எத்தனைபேர் போகிறார்கள் என்று கணக்கெடுப்பதையே தன் பொழுதுபோக்காகக் கொண்ட கோடி வீட்டுக் கிழவர்; காலையில் வீட்டுவேலையை முடித்துக்கொண்டு, கல்கி பத்திரிகையைக் கையில் எடுத்துக்கொண்டு ஊரிலே தங்களைத் தவிர மற்ற எல்லாரையும் விமர்சனம் செய்யும் அம்மாமிகள்; இப்போதைக்கு எங்கேயும் வேலை கிடைக்காமல், பொழுது போகாமல் வீட்டுத்திண்ணையிலே யாரோடு வேண்டுமானாலும் சோழியாட்டம் ஆடுகின்ற சாதாரண பி. ஏ., இன்னும் எத்தனையோ பேர் இருக்கிறார்கள். எவரேனும் எட்டிப் பார்ப்பார்கள், இந்த நீட்டுக் கவரை யாருக்கு அனுப்புகிறான் என்று. அட்ரஸ் எழுதினால், அவர்கள் படித்து விடுவார்களோ என்னவோ?

படித்தால் என்ன, தலையையா வாங்கி விடப் போகிறார்கள்? சிறுகதைப் போட்டியில் பங்குகொள்வது என்ன பஞ்சமா பாதகத்துள் ஒன்றா? என்னுள்ளே எழும்பிய இக்கேள்விகள் என்றைக்கும் என் வெட்கத்தை வென்றதில்லை. ஆமாம், அவர்கள் என்ன சொல்வார்கள். தவறு, அவர்கள் என்ன நினைப்பார்கள் என்ற எண்ணத்திலேயே, அந்த எண்ணம் தோற்றுவித்த வெட்கத்திலேயே மக்கித் துருப்பிடித்துப் போய்விட்டவன் நான்.

அவர்கள் என்னைப் பார்த்து 'ஒருமாதிரி' சிரிப்பார்கள். அந்த 'ஒருமாதிரியை' எப்படி எழுத்துக்களில் விளக்குவது என்று எனக்குப் புரியவில்லை. 'கிரிப்டிக்'காக என்று சொல்லலாமா என்று நினைக்கிறேன்; ஆனால் அதுவும் அந்த ஒருமாதிரியை முழுக்கச் சொல்லாது; கிரிப்டிக், சர்காஸ்டிக் இந்த அடைமொழிகளையெல்லாம் தாண்டி அந்த 'ஒருமாதிரி' இருக்கும். அந்தச் சிரிப்பை எதிர்நோக்கும் திராணி எனக்கில்லை, நிச்சயம் இல்லை. அப்புறம் அவர்கள் தங்களுக்குள் என்னைப்பற்றி என்ன சொல்லிக் கொள்வார்களோ என்ற தேவையற்ற பிரச்னை; வேண்டாத வெட்கம். பைத்தியம் என்று அவர்கள் பட்டம் சூட்டினால்தான் எனக்கென்ன ஆகிவிடப்போகிறது? நியாயமான, ஆனால் பதில் கிடைக்காத கேள்வி.

அப்புறம் போஸ்ட்மேன் ஒருவன் இருக்கிறான் இவர்கள் 'செட்'டில். என்னுடைய கதைகள் திருப்பியனுப்பப்படும்போதெல்லாம் அவன்தான் எடுத்துக் கொண்டு வந்துபோடுவான். அவனும் இன்றுவரை என்னைப் பார்த்து ஏதும் சொன்னதில்லை; ஆனால், அவன் பார்க்கிற பார்வையிலும் அந்த 'ஒருமாதிரி' இருக்கிறது. அவன் வேறு வழியில் வந்தால்...? வந்தாலென்ன, சைக்கிளில் தானே போகப்போகிறான். அப்படிப் போகும்போது, அவனால் கவர் மேலே எழுதியிருக்கும் என்னுடைய பொடி எழுத்தைப் படிக்க முடியுமா என்ன?

அடடா! மறந்தே போனேன். அந்தப் போஸ்ட்மாஸ்டரிடம் காட்டியல்லவா ஸ்டாம்பு கேட்க வேண்டியிருக்கும்? அப்போது அவர் முகவரி எழுதியிருந்தால், அதை படித்து விடுவாரே! சிறுகதைப் போட்டி என்று எழுதி இன்னபத்திரிகை அலுவலகத்திற்கு என்றும் நான் குறிப்பிட்டு விட்டால், அவர் அதைப் படித்துவிட்டு நிமிரும்போது கடைக்கண்ணால் பார்ப்பார். அந்தப் பார்வையை என்னால் சகித்துக்கொள்ள முடியாது. இதுநாள்வரை, எனது நீட்டுக் கவர்களை எல்லாம் வேலைக்குப் போடுகிற அப்ளிகேஷன்கள் என்றுதான் அவர் நினைத்துக்கொண்டு வருகிறார். இப்போது அட்ரஸ் எழுதி எடுத்துக் கொண்டு போனால் 'ராபணா' என்று குட்டை உடைத்த மாதிரிப் போய்விடும். அப்புறம், அவரைப் பார்க்கும் போதெல்லாம், வெட்கப்பட வேண்டியிருக்கும்.

எந்த மனிதனும் தன் விருப்பப்படி நடப்பதற்கு எவ்வளவு தடைகள்! எவ்வளவு வெட்கம் அவனை எதிர்கொள்கிறது! அட்ரஸை நான் எழுதவில்லை. எழுதாமலேயே கவரை

# வெட்கப் போர்வை

**வ. சுதர்சன்**

எடுத்துக்கொண்டு, தெருவிலிறங்கி — பக்க வாட்டில் கண்ணை மறைத்துக் கட்டப்பட்டிருக்கும் குதிரையைப்போல—மேலே சூரியனைப் பார்த்துக்கொண்டு, வழியிலே நிற்பவர்களின் பார்வைக் கணைகளைத் தவிர்த்தபடி நான் நடந்து......

'டுர்பி' என்ற குரல் என்னை உசுப்பியது.

அட்டகாசமாக ஒரு சிறுவன். எருமைக் கடாவை ஓட்டிவந்தான், அரையில் ஒரே ஒரு கோவணத்தோடு. அவனுக்கு எந்தவிதமான வெட்கக் கட்டுப்பாடுகளும் காணோம். நான் கைந்து சிறுமிகள் ஒன்ருக மதிலோரம் போய்ப் பாவாடையை விரித்தார்கள்; அவர்களுக்கும் இந்த வெட்கப் பிரச்னை வரக் காணோம். எனக்கு என் மேலேயே கோபம் வந்தது. இதோ, இவர்களுக்கு இந்த இடத்தில் ஒரு வெட்கமும் இல்லை. யார் என்ன நினைப்பார்கள் என்ற கிலி இல்லை. வாசல் வழியே செல்பவர்கள் ஏதாவது நினைப்பார்களோஎன்று அந்தக்கோடிவீட்டுக் கிழவரோ, அம்மாமிகளோ, சோழியாட்டம் ஆடும் பி.ஏ.வோ வெட்கப்பட்டதாகத் தெரியவில்லை.

அப்புறம் எனக்கு மட்டும் ஏனிந்தத் தேவையற்ற தடுமாற்றம்? தயக்கம் எதற்கு? வெட்கப்படக் கூடாததற்கு வெட்கப்பட்டோமே என வெட்கப்பட்டுக் கொண்டே நிமிர்ந்தேன். எனது திறமையை அல்லது திறமையின்மையை எந்தப் பத்திரிகை ஆசிரியருக்கோ நான் தெரியப்படுத்தினல் அதில் இந்த ஊருக்கு என்ன வருகிறது? ஒன்றுமில்லை. பின் அட்ரஸை எழுதினல்தான் என்ன? இத்தனைபேர் பார்த்தால் என்ன, பார்க்கட்டுமே! அவர்களுக்கெல்லாம் தெரியட்டுமே நான் பத்திரிகைகளுக்குக் கதை எழுதுகிறேன் என்று. நன்ருகத் தெரியட்டும்.—லெட் தெம்—ஐ டோன்'ட் கேர்—நோ, நாட் எ ஜாட். கோ அண்ட் சே இட் ஃப்ரம் த டாப் ஆவ் த மவுண்ட்டன்.

முகவரியை எழுதியே தீருவது என்ற முடிவுக்கு வந்தவுடன், மூர்த்தண்யமாக, நடுத் தெருவிலேயே அந்த எண்ணத்தைச் செயல்படுத்த ஆரம்பித்தேன். தொடைமேல் கவரை வைத்துக்கொண்டு அதன் முதுகுப் பக்கத்தில் எழுத்துக்கள் கோணல்மாணலாக இருந்தாலும் பரவாயில்லை என்று பேனவை எடுத்து எழுதத் துவங்கினேன்.

'டு, த எடிடர்...'' நின்று கொண்டே எழுதுவது சிரமமாகத்தான் இருந்தது. ஆனல் அதற்காக நான்விடத் தயாராயில்லை. பார்க்கட்டும், பார்க்கட்டும், யார் வேண்டுமானலும் பார்க்கட்டும். லூஸ், கிராக் என்று எது வேண்டுமென்ருலும் சொல்லட்டும். மீண்டும் பேனவைக் கவரின் முதுகின்மேல் வைத்து அடுத்தவரியை ஆரம்பித்தேன்.

எனக்குப் பின்னல் யாரோ சிரித்துக் கொண்டே போனர்கள். திரும்பிப் பார்த்தேன். யாரோ முன்பின் தெரியாதவர்கள். ஐந்தாறு பேராகச் சைக்கிளில் போய்க்கொண்டிருந்தார்கள். அவர்கள் என்னைப் பார்த்துத் தான் சிரித்தார்களா? தனக்குத்தானே பேசிக் கொண்டு போகிற ஒருவன் இருக்கிருன். அவன் இந்தக் குழாயடியில்தான் தண்ணீர் பிடிப்பது வழக்கம். அவனைப் பார்த்து நான் சிரித்துக்கொண்டே போவேன். அந்தமாதிரி அவர்கள் என்னைப் பார்த்துச் சிரித்துக் கொண்டே போகிருர்களோ? நான் திரும்பிப் பார்த்தேன் இரண்டாவது முறையாக. அவர்கள் போயே போய்விட்டிருந்தார்கள்; தெருக் கோடியையெல்லாம் எப்போதோ தாண்டியிருப்பார்கள். அவர்கள் எந்த ஆபீஸில் வேலை செய்கிருர்களோ? என் கதையை—என் நிலையை ஜோக்காக்கிச் சிரிப்பார்கள்.

'சிரிக்கட்டுமே, நமக்கென்ன?' நான் மீண்டும் என்னுடைய பழைய நிலைக்கு மனதைக் கொண்டுவர முயன்றேன்; முடியவில்லை. அது வெட்கப்பட்டது. இப்படி, நடுத்தெருவில், நாலுபேர் பார்க்கும்படி, நகைப்புக்குரிய பொருளாக ஸ்பெக்டகலாக இருந்துவிட்டோமே என்று எண்ணி அது கூனிக் குறுகிக் கூசியது.

'இவ்வளவு நேரம் நடுரோட்டில் எழுதுவதையும் நிறுத்திவிட்டுச் சும்மாவே நின்றபடி சிந்தித்துக் கொண்டிருக்கிருேமே — இதை யாரேனும் கவனித்திருப்பார்களோ?'' கவலையோடு நான் திரும்பினேன். இதுவரையில் என்னையே பார்த்துக் கொண்டிருந்தவர்கள் என் தலை இப்படித் திரும்பியதும், சடாரென்று தங்கள் தலையையும் வேறுபுறம் திருப்பிக் கொண்டு எதையோ மிகவும் உன்னிப்பாகக் கவனிப்பவர்கள் போலப் பாசாங்கு செய்தார்கள். எனக்கு அப்போது நிச்சயமாகத் தெரிந்தது: அவர்கள் எல்லாரும் என்னைப் பார்த்துச் சிரித்துக் கொண்டிருக்கிருர்கள். இப்போதும் மனதுள்ளே நகைக்கிருர்கள்.

வெறுப்போடு—என் மேல், உலகத்தின் மேல், எல்லாவற்றின் மேலும் வெறுப்போடு நான் நடந்தேன். அரைகுறை விலாசம் எழுதிய கவரைப் போஸ்ட்மாஸ்டரிடத்தில் தந்தேன்; ''இதென்ன இந்த 'செமி' பாதி விலாசம் எழுதியிருக்கிருன் என்று அவர் என்னைப் பார்க்கக்கூடும் என்று எனக்குத் தோன்றவே, 'எவ்வளவு ஸ்டாம்ப் சார் ஒட்ட வேண்டும்?'' என்று வறண்ட குரலில் கேட்டுவிட்டு, அவரைப் பார்க்காமல் தரையிலே உதிர்ந்து கிடக்கும் சருகுகளை எண்ணத் தொடங்கினேன்.

ஒன்று, இரண்டு, மூன்று...... ●

இரு விமர்சனங்கள் :

# நகுலனின் "நினைவுப் பாதை"

## ஆர். சுவாமிநாதன்

'ஒரு நாவலில் கடைசியாக மிஞ்சி நிற்பது அதன் கதாபாத்திரங்கள் என்கிறார் ஈ. எம். ஃபார்ஸ்டர். நினைவுப் பாதையிலும் நம் நினைவில் பதிபவர்கள் சிவனும், நடராஜனுமே. (ஆசிரியர் அத்வைதி; சந்தேகமில்லை) சிவன் கவிஞன்; Pessimist. நடராஜன் நாவலாசிரியன; Optimist. இது ரொம்பவும் எளிமையான வகைப்படுத்துதல். ஆயின் உண்மையானது. எதிலும் ஒட்டாமல் அலைந்து திரிபவர் நாவலின் ஆசிரியரான கதை சொல்பவர். நாவலில் நேரடியாக தென்படாமல் தன்து அறிவுரைகளைப் பிறர் மூலம் உணர்த்துபவர் சச்சிதானந்த சுவாமிகள்: Indian archetype.

இந்த நாவலை எப்படி வரிசைப் படுத்துவது? யதார்த்த, மனோதத்துவ, நினைவோட்ட, சுயசரிதை எந்த அடைப்புக்குள்ளும் சிக்க மறுக்கிறது இது. நகுலன் என்கிற ஆசிரியரின் வியக்தியை நமக்கு உணர்த்துகிறது. அந்த வகையில் இதற்கு ஒரு பாரம்பரியம் உண்டு. Laurence sterne, Denis Diderof, Machado de assis, Andre gide. எழுதிய The Coiners.

Jung பெண்மையின் தன்மையாக குறிப்பிட்ட Anima சுசீலாவிடம் அணுவளவும் காணோம். அவள் ரொம்பவும் elusive ஆக அமைந்து நம் நினைவிலிருந்து நழுவி விடுகிறாள்.

இந்த நாவலின் சம்பாஷணைகள் பற்றி விசேஷமாகக் குறிப்பிட வேண்டும். அவை முதல் பார்வைக்கு தெளிவற்றவை போலத் தோன்றும்; அவற்றினூடே ஓடும் சூக்ஷ்ம இழைகள் புரிபட்ட பிறகு பிரமிப்பு ஊட்டும். முந்திய நாட்களின் தொடர்ச்சியாகவும், வரும் நாட்களின் முன்னோடியாகவும் அவற்றினூடே தொடர்புகள் பின்னிப் பிணைந்து தொக்கி நிற்கும். சிவனும், நடராஜனும் முக்கியமாக தங்கள் பேச்சுக்கள் மூலமாகவே தங்களை நமக்கு அடையாளம் காட்டுகிறார்கள்.

சுசீலா 'நழுவி' விடுகிறாள் என்றேனே, அவள் நாவல் பூராவும் பேசுகிற வரிகளை எண்ணி விடலாம்.

பின்னர் கடைசிப் பகுதி. நினைவுப்பாதை தடம் புரண்டு மீண்டும் சீராவதை சித்தரிக்கிறது. இதன் முன் பாகம் லா. ச. ரா. வின் parody போல தொனிக்கிறது.

நான் இன்னொரு இடத்தில் குறிப்பிட்டதைப் போல 'மொத்தத்தில் தற்கால தமிழ் இலக்கிய உலகில் இந்த நாவல் அசாத்தியமான ஒரு சாதனை; இதன் ஆசிரியர் அபூர்வ ஒரு படைப்பாளி'. ●

## வா. மூர்த்தி

'நினைவுப்பாதை' நிச்சயம் ஒரு நல்ல நாவல். நாவல் என்பதற்கு சம்பிரதாயமான வரையறைகள் உண்டல்லவா, அவற்றை மீறியதற்காக—அதற்காகமட்டுமே— இதை நல்ல நாவல் என்று ஏற்றுக்கொள்ள ஒரு பெருங் கூட்டம் இருக்கக்கூடும். ஆயின் சச்சிதானந்தம் பிள்ளை (இந்நாவலில்) சொல்கிற மாதிரி, புத்தம் புதுமையில் பழம் பழசு இருப்பது உறுதி. நகுலன் இதைத்தான் தன் நாவலில் செய்திருப்பதாக நான் உணருகிறேன். அதனால்தான் எனது 'நல்ல நாவல்' என்ற மதிப்பீடு.

நகுலனின் நினைவுப் பாதையில் கதையம்சம் இல்லை என்கிற ஒரே காரணத்திற்காக இந்நாவல் பலரால் புகழ்ந்தும் இன்னொரு பலரால் கேலி செய்தும் பேசப்படும். ஆயின் என் கருத்தில், இருதரப்பாரும் பிழை செய்தவராவர். நவீனன என்ற கல்லூரி ஆசிரியன், இலக்கியப் பித்தன், சுசீலா என்ற ஒரு தேவதையின் நினைவுச் சங்கிலியில் பிணைபட்டுப் போன நெஞ்சினன், இலக்கியச் சுத்தமான புத்தகங்களை வெளியிட்டு அம் முயற்சியில் பொருள் நட்டம் அடைந்து பயித்தியம் பிடித்து மருத்துவமனை சென்றுவிடுபடுவதுதான் கதை. சுசீ மயக்கத்தில் பைத்தியமா, இலக்கியக் காதலில் பைத்தியமா என்பது வாசகனின் தீர்மானத்திற்கு. இன்னொரு விஷயமும் உண்டு: நவீனன் பைத்தியம் தெளிந்ததென அனுமானிக்கப்படுகிற நிலையில் இன்னொருவன் — இவன் போலொரு இலக்கியப்பித்தன் —மனநிலைக் கோளாறுக்கு மருத்துவம் பெற உள்ளே வருகிறான். அவன் பேசுகிற [இப் பாத்திரத்தின் பெயர்: எஸ். நாயர்] ஒவ்வொரு ஸிலபலுடனும்—நவீனனுக்கு மட்டுமல்ல—வாசகனுக்கும் உடன்பாடு ஏற்படுகிறது. யார் பைத்தியம்? யார் இல்லை? அப்படியென்றால், யார்தான் பைத்தியம்? யார்தான் இல்லை?

...இது மாதிரி நகுலனின் (நவீனனின்?) கதையைக் கொச்சைப் படுத்துவது நான் செய்கிற பாவம். சிலந்தி இழை வெய்யிலில் மறைவதுபோல, நுண்மையில் நுண்மையாய் நகுலன் செய்திருப்பதை, 'மீதி வெள்ளித்திரையில் காண்க' என்று ஸினிமா பாட்டுப் புத்தக பாணியில் நான் சொல்ல நேருகிற அவசியம்: புரியாமலேயே பாராட்டுகிற கும்பலும், மெக்காலே சொன்னது போல 'புரிந்துகொள்ள மறுக்கிற' கூட்டமும் இலக்கியக்களத்தை

இன்று மொத்தக்குத்தகை எடுத்திருக்கிற காரணம்தான்.

சரி, அவர்கள் எக்கேடோ போகட்டும்' நகுலனின் படைப்புக்கு வருவோம். இந் நாவலில் ரீடபிலிடி அற்புதமாக இருக்கிறது. இது நகுலனின் பிற படைப்பினின்று வேறு பட்ட முக்கியமான விஷயம். ரீடபிலிடி இருக் கிறது என்பது குறைத்துச் சொல்லப்படுவ தாகும்; உண்மையில் இது, ஒரு தனி வாசக அனுபவமாக [unique reading experience] உள்ளது. தன்மை ஒருமையில் நவீனன் கதை சொல்லிக் கொண்டிருக்கும்போது நடு வில் அதே தன்மை ஒருமையில் சிவம்சொல்ல, மீண்டும் நவீனன் தொடர, இதுபோன்ற 'தண்டவாள மாற்றங்கள்' [change of rails] மிக இயற்கையாக அமைந்திருப்பது பாராட் டிற்குரியதாகும். தமிழில் வேறுயாரும் இம் முயற்சியில் இறங்கினல், :தொண்டியடிக்க வேண்டியதுதான்.

அசோகமித்திரன் சொன்னதுபோல 'பேச்சு, பேச்சு ஓயாத பேச்சுதான்' இந் நாவ லில். இலக்கிய அனுபவத்தில் இதுவும் மிக முக்கியமான சங்கதியாகும். பத்து புத்தகங்கள் படிப்பதும், அரைப்பக்கம் எழுதுவதும், இரண்டு மணி நேரம் பேசுவதும் எல்லாமே இணையான, சுகமான அனுபவங்கள்தான். இந்த உண்மையை நம்புகிறவிதத்தில் நகுலன் செய்திருப்பது இன்னொரு பாராட்டிற்குரிய அம்சம். இன்னும் தெளிவாகச் சொல்கிற தென்ருல், இ. பா. பாத்திரங்களின் உரை யாடல்களல்ல இவை. அவற்றையும்விட ஐ. க்யூவில் இவை (இப்பாத்திரங்களின் உரை யாடல்கள்) உயர்ந்ததாய் இருந்தும், இவற்றை நம்ப முடிகிறது. இது ஒரு சாதனையே.

பாத்திரங்களின் அடையாளம் காண முடி கிறது, என்கிருர், அசோகமித்திரன். எஸ். ஆர். கணையாழியில் குறிப்பிட்ட, என்போன்ற 'உளுந்தூர் பேட்டைக்காரர்'களுக்கு இவ் வடையாளங்கள் தெளிவாகாது போகலாம். ஆயினும் நிழலான இரண்டாம் வரிசைப் பாத்திரங்களான பெரும்சுடர் ஆசிரியரும், ராமநாதனும், விருந்தளிக்கிற நடராஜனும் மிகக் கச்சிதமான பாத்திரப் படைப்புகள். நவீனன் லட்சியவாதியாயினும், யதார்த்தக் குருடல்ல அவன். நினைவிலிருந்து குறிப் பெடுக்கிறேன்: பிரசுரமாவதற்கு முன் அவன் காலே நக்கியும் நாலு எழுத்து அச்சானதும் மேலே விழுந்து குதறுவதுமான இலக்கியப் படைப்பாளிகளைப் பற்றிய நகுலனின் வரு ணனையில் ஒரு பார்வையாளனின் ரியலிஸம் தெளிவாகிற பாங்கு, பாராட்டிற்குரியதாகும். இவ்வருணனைகள் முன்பொரு முறை முஸ் தபர கணையாழியில் எழுதிய 'நாய்கள் நாய் கள்' என்ற கவிதையை நினைவூட்டியது.

ஆக, இலக்கியத்தில் மிதவாதியான எனக்கு என் பழைய, தெளிவான, பிறருக்கு புரியக் கூடிய அளவுகோள்களின் படியே [அதாவது, கதையமசம, பாததிரப்படைப்பு, யதார்த்தம், ரீடபிலிடி, உரையாடல்கள் வகை யரு] இந் நாவல் ஒரு நல்ல நாவலாகப் படுகிறது.

ஆயினும் இந்நாவலில் உன்னதம், நாவ லுக்குப் பின்னும் 'மரத்தை மறைத்தது மாமத யானை' என்கிற பாணியில் நெஞ்சில் ரீங்கரிக் கும் நவீனனின் கவிதைகள்! நமது ஏராள மான புதுக்கவிதைக்காரர்கள் கொஞ்சநாள் பேனவில் மை நிரப்பாதிருக்கச் செய்கின்றன.

'திரௌபதி அவள்

வந்துபோகும் அர்ச்சுனன் நான்' என்கிற கவிதை;

'16'ம் பக்கத்தில் உள்ள 'கடல் நீலம்';

'வட்டமிடும் பருந்துபோல
வாடியிருக்கும் நாரை போல
செத்துக கிடக்கும்தன் இனமொன்றைச்
சுற்றிச் சுற்றி வரும் காகம்போல'

என்கிற கொல்லிப் பாவை;

['போல' என்பதான உவம உருபுகள் கவிதையைப் பாழ்படுத்தும் என ஒரு கவிக் குழந்தை புதுயாப்பிலக்கணம் எழுத முயற் சித்தது நினைவுக்கு வந்து சிரிப்பூட்டுகிறது.]

'என்னகத்து நின்னுரு
கண்முன் மிளிரும் கயிற்றரவு'

என்கிறவரிகள் ஆகியவை அற்புதமானகவிதை அனுபவங்கள். ஓ! என்ன கவிதைகள்!!

ஒரேயொரு உதாரணம் சொல்கிறேன்:

'The sun was sinking
like an etherised patient
on the hospital table' என்கிற டி. எஸ். எலியட்டின் வரிகளுக்கு ஒப்பானது.

'பகல்
குற்றுயிராகிக்
கிடக்கும்
அந்திப் பொழுது'

என்கிற நவீனனின் [நகுலனின்?] கவிதை வரிகள். இந்தப் புத்தகத்தில் இந்தக் கவிதைகள்தான் முக்கியம். 'நினைவுப்பாதை'யில் கவிஞன், சிவன் எனச் சொல்வோர்' பிழை செய்தவராவர். நாவலின் கவிஞன் நவீனனே!

இறுதியில், என் வழக்கமான பாணியில், நாவலின் குறைகள் பற்றி. நவீனன் பைத்தியமெனக் காண்பிக்க 'ஜங்ளி ஜிங்ளி' என்று பக்கங்களை வீணடித்திருப்பது கண்டிப்பதிற்குரியது. அ. மி. இதைத்தானே முன்னுரையில் பாராட்டியிருக்கிறார்? நல்லது, அது அவர் கருத்து. இன்னொரு குறை: எதையுமே சொல்லாத சிவன் என முதலில் வருணிக்கப்படுகிறவன் எல்லாவற்றையுமே சொல்லத் துவங்கிய தெங்கனம் என்பதைத் தெளிவு படுத்தாமை. சொன்னால் தானேய்யா கதை என்று கேட்கலாம். ஆனால் அதுவல்ல என் கேள்விக்கு பதில். அப்புறம் இந்த குருட்சேத்திர ஸ்கூல் எழுத்தாளர்களுக்கே உரிய, மௌனி பாதிப்பு [ஆக்கிரமிப்பு?]. உதாரணமாக ஒரு வரி: 'எழுத்தாளன் ஒருத்தனும் ஒருத்தனுக்கும் பயப்படமாட்டான்' [பக். 162]. 'எந்தவிதம் இந்தவிதம் முடியும்' என்று, 'how is it possible' என்கிற சாதாக் கேள்வியை, சொற்களில் த்வம்சம் செய்வாரே மௌனி, அது போல! நாவலில் நெடுக, ஆங்காங்கே, உரையாடல்களில் இப்பாதிப்பு நிர்வாணமாய்த் தெரிகிறது. மௌனியையே தாள முடியாத போது, மௌனியின் நகல்களை வேறு எப்படிப் பொறுப்பது? நாவலைக் கறைப்படுத்துகின்றன இம் முயற்சிகள்.

மொத்தத்தில், அ. மி. யோடு உடன்பட்டாக வேண்டும்: தமிழ் உரை நடைக்கு இந் நாவல் புதிய மரபை அளிக்கிறது. இன்னொன்றும் சொல்லிவிட வேண்டும்: இப் படைப்பைக் கேலி செய்ய, தூக்கி எறிய எவ்வித உழைப்பும் தேவையில்லை; வழுவழுப்பான நாக்கு ஒன்று இருந்தால் போதும். ஆயின் அதுபோன்ற கேலிகளால், நஷ்டம் நகுலனுக்கல்ல. ●

# வெள்ளம்*

நாற்பதுக்கும் மேற்பட்ட கலாப்ரியாவின் கவிதைகள் சேர்க்கப்பட்டு சிறிய கவிதைத் தொகுப்பாக வெளி வந்துள்ளது. இலக்கியச் சங்க வெளியீடான 'புள்ளி'யைப் போலவே தான் அளவு. அதாவது ஒரு ரூபாய்த் தாளை இரண்டாக மடித்த அளவு. தொகுப்புக்குப் பெயர் 'வெள்ளம்' என்று வைக்கப்பட்டிருந்தாலும் அது அஃக் பத்திரிகையில் அவர் வெளிப்படுத்தியிருந்த வெள்ளமாக இல்லை என்பது குறிப்பிடத் தகுந்தது. நாற்பதுக்கும் மேலான கவிதைகளில் ஒரு பன்னிரண்டு கவிதைகள் நமது கவனத்தைக் கவரக் கூடியதாக இருப்பதிலிருந்தே அவருக்குப் புதிய கவிஞர்களிடையே வாசகர்கள் கொடுத்திருக்கும் விசாரிப்பு நியாயமானது என்பது தெரிய வரும். கொள்ளுதல் தள்ளுதலில் கலாப்ரியாவுக்குப் போதிய முயற்சி இல்லை என்ற குற்றச் சாட்டு இனியும் இருந்துவருமோ, வராதோ, இந்தத் தொகுப்பைப் பொறுத்த மட்டில் அதற்கு அவ்வளவு இடமில்லை என்று சொல்லி விடலாம்.

கலாப்ரியாவின் வெளிப்படையான காதல் கவிதையில் இந்த மதிப்புரையாளனுக்கு இருக்கிற நம்பிக்கையைக் காட்டிலும் அதே காதல் அமிழ்ந்தொலிக்கும் அவருடைய மற்ற கவிதைகளில் ஈடுபாடு அதிகமாக இருக்கிறது. அவருடைய கவனத்துக்குரிய கவிதைகளில் ஊடாடும் துன்பம் தவிர்ந்த நிராசை குறிப்பிடத்தகுந்த அம்சமாகும். உதாரணமாக ஒரு கவிதை.

**நன்றி**

தரையில் மோதுகையில்
சத்தமாய்
தன்னை விடுவித்த
மலையுச்சிக்குக் கேட்கும்படி
நன்றி கூறியது
அருவி.

—ஞானக்கூத்தன்

---

*வெள்ளம் (ஒரு சின்னக்கவிதைத்தொகுப்பு)
கலாப்ரியா
கிடைக்குமிடம்
28, சுடலைமாடன் கோயில் தெரு,
திருநெல்வேலி-6.
விலை 30 காசு தாபால் செலவுடன் 55 காசு
மூன்று பிரதிகள் (தபால் செலவுடன்) ரூ. 1.

## நூல் நிலையம்

இங்கே,
மூக்கின் தொழிலை
மூளை செய்யும்.
முகக் கண் இருளும்
மூன்றும் கண் விழிக்கும்.
இது,
உயிரை உண்ணும்.
பிணங்களை வெளியே
உமிழ்ந்து விடும்.

—பிரபஞ்ச கவி

## தோஷம் தொடர்கிறது....

பேரம் பேசிக்
கூட்டி வந்த
கரக ஆட்டக்காரி
நன்றாகத்தான்
ஆடுகிறாள்—
ஆனால் : அவளின்
அந்த—
வயிற்றுப் பிள்ளையும்
ஏன் ஆடுகிறது?
அதற்குத்—
துட்டுக் கொடுத்தது
யார்
தனியாக!

—"யுஸ்டேஸியா"

## ..யிருப்பினும்..

உரிமைகள்
அளித்துக் காக்கும்
அரசாங்கங்கள்
கிறிய அம்பின்
கிழே தேரைகள்
ராமா என்னும்.

—ப. கங்கைகொண்டான்

## ஈர வெண் தடயங்கள்

யெவ்டுஷெங்கோ

ஈர வெண் தடயங்கள் காலைக் கவ்வ—
பனி மூடிய ட்ரோலி...பனி சூழ்ந்த வீதி
அவள் கையுறை நுனி இதழ், கன்னம் வரை
"போய்வா—" போ.

பிணமாக, மிக்கு வரும் பனியில்
அமைதியில், எதிர்பார்த்தபடி, போ.
ஒரு திருப்பம் :

மெட்ரோ பாதாள ரயிலடி.

விளக்கின் சொடுக்கு. தொப்பியின் பனிப்பு
நான் நிற்கிறேன்—எண்ணங்களில் நூற்று,
குகையை, ரயிலை, தண்டவாளத்தை
இருள் கவ்வுவதைப் பார்த்து,
பிறர்போல் உட்கார்ந்து காக்கிறேன்.
பனிப் பளிங்கைத் தொட்டு, குளிர்கிறேன்.
மனசில் கனமாக, புரிந்து கொள்கிறேன்,
எதுவும் எப்போதும் நிஜமாக நடக்கவில்லை,
நடக்காது,
முடியாது.

தமிழில்: தீபப்ரகாசன்

## ஒரு கவிதை

நீ எப்படி இருக்க முடியும்?
மரம் இருக்கலாம்
தார் ரோடு இருக்கலாம்
கற்குவியல் இருக்கலாம்
உன் இருக்கையின் அடித்தளம்
இவற்றின் மேல் இருக்குமா?
கண்ணெட்டிய தூரம்
பூகோளம்
கற்பித்த கோடுகள்
இவை சில சமயம் காலடிச்
சுவடுகள்
சுவடுக்குட்பட்ட
உயரம்
பருமன்
சாயல்
வெளிப்புறத்து இயற்கை அதிகமாகிக்
கொண்டே இருக்கிறது.
இது மையம்
அது மையமல்ல
நீ இருப்பதாலா அல்லது
இரண்டுக்கும் தொடர்பே இல்லையா?
தூரம்
அகலம் சுற்றளவு
பரப்பளவு
விஸ்தீரணம்
உன் பெயர்
எதன் உண்மையை ருசுப்படுத்துவது.

ரா. ராதாகிருஷ்ணன்

## நீரும் நிலமும்

முட்டி மோதிப் பார்க்கிறது கடல்,
மணலைத் தன் நீலப்புடவைக்குள்
சுருட்டிக் கொள்ள, மிக
பாசத்தோடும் நேசத்தோடும்
மணல், பாறை—மலையாய் நிற்கிறது
மூன்றில் ஒரு பங்குதான் என்றாலும். இது
நீருருண்டை அல்ல
மண்ணுருண்டை தான்.

—ஆத்மாநாம்

## குருடு

குருட்டுக் குருவி
இருட்டில் பறந்து
களைத்து விழுந்தது.
எடுத்துப் பார்த்தேன்
அதன் பேர்
தமிழ்——

—நெடுமிடல்

## விற்பனை

கைத்தறியாளர் கலக்கம் தீர்க்க
அமைச்சர்களுக்கு ஆசை பிறந்தது
தேங்கிய துணிகளைத் தேடிப் பெற்று
வீதி வீதியாய் விற்பனை செய்ததில்
ஒரு நாள் விற்பனை ஐம்பது லட்சமாம்
ஆமாம்—
துணிவை விற்றவர்
துணிகளை வாங்கினர்.

—சகுந்தலா கதிரேசன்

# ழீன் பால் சார்த்தருடன் ஒரு பேட்டி

கேள்வி: இரண்டாவது உலகப்போரின் முடிவு நெருங்கிக் கொண்டிருந்த சமயத்தில், எக்ஸிஸ்டென்ஷியல் தத்துவத்தைக் கட்டுரைகள் மூலமும், நாவல்கள், நாடகங்கள் மூலமும் நீங்கள் எடுத்துச் சொல்லிக் கொண்டிருக்கும் போது, சிற்றின்பத்தில் நாட்டங்கொண்டிருந்த பலரகப் பாடகர்கள், நடிகர்கள், இசைக் கலைஞர்கள், நாட்டியக் காரர்கள், அரசியலில் ஈடுபட்டவர்கள், பத்திரிகைக்காரர்கள், மாணவர்கள் எல்லோரும் அடங்கிய ஒரு உல்லாசமான, போகமான—சிலர் சொன்னார்கள் வெறும் புலன்நுகர்வை அடிப்படையாகக் கொண்டது என்று—இயக்கத்திற்கு நீங்கள் தலைமை தாங்கிக் கொண்டிருந்ததாகச் சொல்லப்பட்டது. உங்களைப் பற்றிய இத்தகைய பல்வேறு கதைகளைப்பற்றி என்ன சொல்கிறீர்கள்?

சார்த்தர்: உண்மை என்னவென்றால், சங்கீத கோஷ்டியில் இருந்த சில சிறுவர்களும் என் புத்தகங்களை விரும்பிப்படித்தார்கள் என்பது தான். உடனே எல்லோரும் இது என்னுடைய சொந்தத் தத்துவத்துடன் சம்பந்தபட்டது என்று நினைக்க ஆரம்பித்தனர். அமெரிக்காவிலிருந்து வந்த அழுக்குக் கட்டம்போட்ட சட்டைகளை ஒரு இளந்தலைமுறை முழுதும் அணிந்ததற்குக் கூட நான்தான் காரணம் என்று சொன்னார்கள். என்ன முட்டாள் தனம்!

கே: இந்த ஆண்டுகளில் பிரான்ஸில் நிகழ்ந்த பல தற்கொலைகளுக்கு உங்களுடைய வேதனை-விரக்தி தத்துவம்தான் காரணமாகக் கருதப்பட்டதல்லவா?

சார்த்தர்: ஆமாம் அப்படித்தான். Samedi Soir என்கிற பத்திரிகை முழுதும் அதைப் பற்றிய நம்பமுடியாத கட்டுக்கதைகள்தான். அதில்ஒன்று: ஒருநாள் படுக்கையறைக்கு ஒரு ஸ்திரீலோலனின் பாணியில் ஒருத்தியைச் அழைத்தேனாம். பிறகு அலமாரியிலிருந்து பழுத்த பாலாடைக்கட்டியை எடுத்துவந்து அவள் மூக்கிற்குக் கீழேபிடித்து 'முகர்ந்து பார்' என்று சொல்லி, பிறகு வெளியே போகச் சொன்னேனாம். ஒரு பெண் இப்படிக் கூறினாள். ஆனால் அவதூறுக்குப் பாத்திரமானவனாக நான் கருதப் படுவதற்குக் காரணம் உண்மையில் என்ன தெரியுமா? 1945லிருந்தே பத்திரிகைகள் என்னைச் செத்து போனவனாகவும், ஒழிந்து போனவனாகவும் வர்ணிப்பதை விசேஷமாகக் கொண்டிருக்கின்றன. ஒவ்வொரு பத்திரிகையும் இதையே சொல்லி வந்திருக்கிறது. இந்த வதந்தியே எங்கும் பரவியிருக்கிறது. நான் எழுத ஆரம்பித்ததிலிருந்தே என் சாவை அறிவிக்கத் தொடங்கியதை இன்னும் அவர்கள் நிறுத்தவில்லை. என்னுடைய கல்லறையில் நான் ஓய்ந்து விட்டவன் என்று சொல்வதையும் விட்டு விடவில்லை. மற்றவர்களை மிகக்கோபம் கொள்ளச் செய்வது, நான் இரட்டிப்பான 'துரோகி' என்பதுதான். நான் ஒரு பூர்ஷ்வா. ஆனால் பூர்ஷ்வாத்தனத்தைப் பற்றி மிகக் கடுமையாகப் பேசுகிறேன். வயதானவன். ஆனால் என் தொடர்பெல்லாம் பெரும்பாலும் இளையவர்களுடன்தான். அவர்களுடன் சுலபமாக என்னால் பழக முடிகிறது. அவர்கள் தான் என் முதல், ஆதாரப் பொதுஜனம் (basic public). என்னுடைய இளமையில் என்னை விரும்பியிருந்தாலும், நாற்பது வயதுக்கு மேற்பட்டவர்கள் என்னைக் கண்டனம் செய்கிறார்கள். அதனால் நான் இரண்டு இடங்களிலும் 'துரோகி'யாக இருக்கிறேன், தலைமுறைப் போராட்டத்திலும் சரி, வர்க்கப் போராட்டத்திலும் சரி. 1945 தலைமுறை நான் அவர்களைக் காட்டிக் கொடுத்து விட்டதாக நினைக்கிறது: ஏனென்றால் No Exit மூலமும் Nausea மூலமும். என்னை அவர்கள் கண்டு கொள்ள முடிந்தது. அவற்றை எழுதும் போது என் கருத்துக்களின் மார்க்ஸிய உள்ளர்த்தங்களை நான் அப்போது தீர்மானித்திருக்கவில்லை. மார்க்ஸியம் அதுவரை என்னைக் கவரவில்லை. இளம் வயது. நல்ல குடும்பத்தில் பிறப்பு. தேவை, வேலை என்ற கட்டாயங்களுக்கு உட்படாமலேயே உலகம் என்னுடையதாகிவிடும் என்ற உணர்வை இவை எனக்குக் கொடுத்திருந்தன.

கே: உங்கள் வாழ்க்கை எப்படி அமைய வேண்டும் என்பது அப்போது உங்களுக்குத் தெரிந்திருந்ததா?

சார்த்தர்: தெரிந்துகொள்ள ஆரம்பித்திருந்தேன். நாவலாசிரியனாக வேண்டும் என்று பதினைாவது வயதில் விரும்பினேன். ஆனால் Ecole Normale Superieureல் சேர, தத்துவம் படிக்க வேண்டியதாயிற்று. என் ஆர்வமோ, இலக்கியப் பேராசிரியர் ஆகவேண்டும் என்று. பிறகு ஹென்ரி பெர்க்ஸன் எழுதிய ஒரு புத்தகத்தைப் படிக்க நேர்ந்தது. ஒருவன் மனதில் காலம் எப்படி ஸ்பரிசிக்கப்படுகிறது என்று அதில் திட்டவட்டமாக விவரித்திருந்தார். என்னிடமேயே இந்த உண்மையை நான்

புரிந்து கொண்டேன். சிலகாலத்திற்குப் பிறகு நான் phenomenologyஐக் கண்டு கொண்டேன். அதாவது, எதைப்பற்றியும் ஒருவன் ஸ்தூலத்தன்மையுடன் பேசமுடியும் என்பதை தெரிந்து கொண்டேன். தத்துவார்த்தமாக, தத்துவப் பாடபுத்தக மொழியைக் காட்டிலும் விரிவாகவும், அதிக விஞ்ஞான பூர்வமாகவும் பேசமுடியும் என்பதும் தெரிந்தது. இலக்கியத்தையும் தத்துவத்தையும் ஸ்தூல வெளிப்பாட்டு முறையில் இணைக்க வேண்டும் என்ற எண்ணம் எனக்கு இருந்தது. இதில் தத்துவம் முறையையும், கட்டுப்பாட்டையும் தரும்; இலக்கியம் வார்த்தைகளைத்தரும். பொருளுக்கும் மனிதனுக்கும் இடையில், இதே மாதிரி மனிதர்களிடையே, நிலவும் ஆச்சரியமான, ஸ்தூல உறவைக் கண்டுபிடிக்க ஆவலாக இருந்தேன்.

கே: இந்த உறவுத்தன்மைகளை ஆராய்கையில், ஜெர்மனிய தத்துவ ஆசிரியர் மார்டின் ஹிடெக்கரால் இரண்டாவது உலகப்போர் சமயத்தில் நீங்கள் பாதிக்கப்பட்டதாக எழுதியிருக்கிறீர்களே.

சார்த்தர்: ஆமாம். அப்போது நான் போர்க்கைதியாக இருந்தேன். என்னுடனிருந்த சில பாதிரிமார் தத்துவத்தைப் பற்றி அவர்களிடையே பேசுமாறு சொன்னார்கள். நாங்கள் படிக்க ஜெர்மானியர் அனுமதித்திருந்த ஒரே ஆசிரியர் ஹிடெக்கர். கடைசியில், எல்லாப் பொருள்களுமே (objects) கருவிகள் தாம் என்று வாதிக்கிறார் அவர். என்னுடைய முதல் நாவலான Nausea வில் மரங்களைப் பார்த்து, அவற்றின் சாராம்சத்தைப் புரிந்து கொள்ள, அவை என்ன என்பதை வார்த்தைகள் மூலம் விளக்க முயன்றேன். அதாவது, ஒவ்வொன்றைப்பற்றியும் தொடர்ந்து கேள்வி கேட்க ஆரம்பித்தேன். அவை என்ன என்று நிர்ணயிக்க முயன்றேன். What are objects? நாம் ஏன், எதற்காக இங்கே இருக்கிறோம்? ஹிடெக்கரின் கருத்துப்படி, விறகிற்காகவோ, கட்டிடத்திற்காகவோ வெட்டப்படுவதுதான் மரம். எதற்காகப் பயன்படுத்தப் படுகிறதோ அதுதான் மரம்—மனிதனைப்போல. ஆனால் மனிதன் தன்னை அறியச் சுதந்திரத்துடன் இருக்கிறான், அவனுக்காகவும், பிறருக்காகவும் தேர்ந்தெடுக்க. மனிதனின் வாழ்க்கை அமைப்பை, அதற்கடியில் மனிதத் தேவைகளுக்கும், உழைப்புக்கும், கருவிகளுக்கும் நம்மை இட்டுச் செல்லும் மற்ற அமைப்புகளைப் பார்க்காமல் என்னால் ஆராய முடியவில்லை. ஒரு கப் காப்பி தயாரிக்கும்போது கூட உலகத்தை நான் மாற்றுகிறேன். Existentialism and Humanism புத்தகத்தில் மனிதனின் ஒவ்வொரு முடிவும், அதன் எந்த அர்த்தத்திலும் சரி, அவனை மனித இனம் முழுவதற்கும் சட்டமியற்றுபவனாக ஆக்கிவிடுகிறது என்று சொல்லியிருக்கிறேன். மனிதனுக்கு முழுமையான, ஆழ்ந்த பொறுப்பிருக்க வேண்டும்.

கே: 'மனிதன் சுதந்திரமாக இருக்கத்தான் விதிக்கப்பட்டிருக்கிறான்' என்று எழுதியிருக்கிறீர்கள். அப்படிச் சொன்னது எந்த அர்த்தத்தில்?

சார்த்தர்: விதிக்கப்பட்டிருப்பது, அவன் தப்பிக்க முடியாத வகையில் பொறுப்புடன் இந்த உலகத்தினுள் வீசப்பட்டிருப்பதால். சாஸ்வதமான மதிப்பீடுகளினால் கைவிடப்பட்டதால் நாம் நமக்கேயான மதிப்பீடுகளை உருவாக்கிக் கொள்ள வேண்டும்.

கே: எப்படி?

சார்த்தர்: இந்த நேரத்தில்—ஒரு விஸ்தரிக்கப்பட்ட சமயத்தில்—நிகழ்வதைக் குறிக்க Original Choice என்று கூறுகிறேன். இதில் ஒருவன் தன்னிலிருந்து இதுவரை மற்றவர் உருவாக்கியிருக்கும் ஒன்றிலிருந்து வேறொன்றை உருவாக்கிக் கொள்கிறான். பிறரால் உருவாக்கப்பட்டு நாம் ஆரம்பிக்கப்படுகிறோம். மறுபடியும், பிறர் நம்மை என்னவாகச் செய்திருக்கிறார்கள் என்பதில் தொடங்கி நம்மையே நாம் மாற்றியமைத்துக் கொள்கிறோம். ஆனால் நம்மை மாற்றியமைத்துக் கொள்ளும்போது டயலக்டிக் இடையில் வருகிறது. நாம் எதிர்பார்த்ததிலிருந்தும், மற்றவர்கள் நம்மில் எதிர்பார்த்ததிலிருந்தும் நாம் வித்தியாசமாக நம்மைக் காண்கிறோம். இதுதான் சுதந்திரம். ஆனால் இது ஒன்றும் மகிழ்ச்சிகரமான விஷயமில்லை. அதனால்தான் 'சுதந்திரமாக இருக்கத்தான் விதிக்கப்பட்டிருக்கிறான்' என்ற தொடரை உபயோகிக்கிறேன்.

கே: ழீன் ஜெனேயை இந்த வார்த்தைகளில் சொல்லியிருக்கிறீர்கள். எந்த விதத்தில் அவன் 'சுதந்திரமாக இருக்க விதிக்கப்பட்டவன்?'

சார்த்தர்: குழந்தை ஜெனே முழுக்க முழுக்க தண்டனையினாலும், சமூக அமைப்புகளினாலுமே வக்கிரபடுத்தப்பட்டவன். ஆனால் இச்சிறுவனுக்கு தன்னைத்தானே மாற்றி அமைத்துக்கொள்ளத் தேவையான சக்தியும், உறுதியும், புத்திசாலித்தனமும் இருந்தன. தனக்குத் தரப்பட்டவையிலிருந்தே, இருப்பினும், தவிர்க்கமுடியாத வகையில் தன்னை மாற்றி அமைத்துக்கொண்டான்; ஹீனமான தன்னை. அத்துடன் அவன் என்ன செய்தாலும் அவனுடைய நோக்கங்கள் அவன் நினைத்த விளைவுகளையன்றி மற்றவற்றையே கொண்டிருக்க நேர்ந்தன. அவன் வாழ்க்

கைக்கு அவன் தந்து கொண்ட திசைக்கு அவனே பொறுப்பு, — நம்மைப்போலவே. ஜெனே தான் நினைத்த குறிக்கோளை அடைய வில்லை. இன்னும் சரியாகச் சொன்னால் அவனுக்கு எந்தக் குறிப்பிட்ட குறிக்கோளும் இல்லை, சமூகம் திருடனுக்கிவிட்ட தன்னை மாற்றி அமைத்துக் கொள்வதைத் தவிர. "குற்றவாளி ஜெனேவுக்கான" ஜனாதிபதியின் மன்னிப்பிற்கு "கவிஞன் ஜெனே" என்ற உண்மை இட்டுச் சென்றது. அதே நேரம், அவனுடைய கவிதையின் மூலத்தை—சிறை வாழ்விலிருந்தும், அவமானத்திலிருந்தும் சுதந்திரம் பெற அவன் நிகழ்த்திய போராட்டத்தை...வரண்டுவிடச் செய்தது. அவன் போராடிக்கொண்டு, தன்னுடைய நம்பிக்கைகள் மூலம் சிறைவாசத்திற்கு எதிராக, அவமானத்திற்கு எதிராகக் குரலை எழுப்பிக் கொண்டிருந்தபோதுதான் அவனுடைய எழுத்தின் மிக ஆழமான முக்கியத்துவத்தைப் பெற்றிருந்த சிறப்பான படைப்பு நேரம் இருந்தது. அவனுடைய முயற்சிகள் ஒரு மாதிரியான குட்டி பூர்ஷ்வாவாக அவனைச் செய்தவுடன்—சமூக வாழ்க்கைக்குத் திரும்பிய தன் மூலம்—அவனுக்கு அந்தச் சமூக அமைப்பைப் பற்றிய பிரமைகள் ஏதும் இல்லை என்றும்—எழுதுகிற காரியம் அதனுடைய உன்னதமான அர்த்தத்தை அவனுக்கு இழந்துவிட்டிருந்தது. முந்தையமாதிரி நம்பிக்கை மீதான கற்பனை உலகத்தை இழந்துவிட்டாலும், அந்த அர்த்தத்தில் சுதந்திரமாக இருந்தாலும், விளைவுகள் மகிழ்ச்சிகரமானதாக இல்லை. இப்போது அவன முற்றிலும் தனியன்.

கே: அவனுடைய ஹோமோ செக்ஷுவல் நண்பர்கள் என்ன ஆனார்கள்?

சார்த்தர்: அவர்களால் அவனுக்கு ஒரு சுகமும் இல்லை. அவனுடைய ஹோமோசெக்ஷுவாலிடிக்கு அவசியமான இந்த பிரமைக்கும் இந்த பரிதாபத்திற்குரிய ஜந்துக்களைப் பற்றிய உண்மையான புரிந்து கொள்ளலுக்குமிடையேயான போராட்டத்தை அவனுடைய இரண்டாவது நாவலான The Miracle of-the Rose சொலகிறது. இதுதான் அவனுடைய இக்கட்டான நிலை. தான் நேசிக்கும் ஆணகள் மிக அற்புதமானவர்களாகவும், பரிதாபத்திற்குரியவர்களாகவும் ஜெனேவுக்குத் தோன்றுகிறார்கள். இப்போது அவன் மிகத் தெளிவாகக் காண்பது இந்த பரிதாபத்திற்குரிய அம்சத்தைத்தான். ஜெனே தன் அன்புக்கான பாத்திரங்களை முற்றிலும் மாற்றிக்கொண்டு விட்டான். இப்போது அவன் கவனமெல்லாம் தொழில் முறையில் அபாயத்துடன் வசிப்பவர்கள் தாம்; கழைக்கூத்தாடிகள், மோட்டார் பந்தயக்காரார்கள், முன்பு, பலம் ஏதும் இல்லாத, ஆனல் பலம் இருப்பதாகக் காட்டிக் கொண்ட முரடர்களைத்தான் நேசித்தான் ஜெனே பழக்கத்தின் காரணமாகத்தான் ஹோமோசெக்ஷுவல் ஆனவன். இனியும் அவனுடைய முழு ஜீவியத்துவத்தை உள் அடக்கிய பாலுணர்ச்சியிலிருந்து பிறந்த பிரமைகளின் பிடித்தாட்டல் அல்ல அது. அது அவனை இப்போதெல்லாம் ஈர்ப்பதில்லை. தன் அன்பை நியாயப்படுத்துவதற்குத்தான் இளைஞர்களுடன் படுப்பதைக் கடமையாக ஜெனே உணர்கிறன் என்று எனக்குத் தோன்றுகிறது.

கே: அவனுடைய அனுபவரீதியான இத் தன்மையைக் கருத்தில் கொண்டால் நீங்கள் அவனைப் புனித ஜெனே என்று ஏன் அழைத்தீர்கள்?

சார்த்தர்: It wasn't I. He canonised himself. When I say 'Saint Genet, of course' I am being ironic. கிறிஸ்துவனுக மாறிய புனித ஜெனே என்ற நடிகன் முன்பொரு காலத்தில் உண்மையிலேயே இருந்தான். ரோமானியர்கள் அவனைக் கொன்று விட்டார்கள். ஆனல் ஜெனே என்ற எழுத்தாளன் தன்னுடைய புத்தகங்களில் 'நான் துறவி' என்றே அல்லது 'நான் பெண் துறவி' என்றேதான் எப்போதும் சொல்கிறன். அவன் குறிக்கோளையும், அவனுக்கு என்ன தேவை என்பதையும் சுருக்கமாக இது சொல்லி விடுகிறது. அவன் என்னவாக இருக்கிறன் என்பதல்ல: ஏனென்றல் ஒருவன் எதுவுமாக ஒருபோதும் இருப்பதில்லை; இருக்கப்பார்க்கிறேம். ஆனல் நாம் கருதியதை அடைவதில்லை.

கே: உங்களுடைய நாடகமான The Fliesல் எழுதியிருக்கிறீர்கள், "சுதந்திரம் தன்னுடைய ஒளிப்பாதையை ஒருவனுடைய இதயத்தில் ஏற்றிவிட்டதென்றல், கடவுள்களும் அவனுக்கு எதிரே சக்தியற்றவர்கள்." ஆனல் கடவுள்களும் சக்தியற்றவர்கள் என்று சொல்வதில் நாஸ்திகர் என்று கூறிக்கொள்ளும் நீங்கள் கடவுள் இருப்பதை ஒப்புக்கொள்கிறீர்கள் இல்லையா?

சார்த்தர்: சுதந்திரத்தைப் பற்றிய இந்த மாதிரியான கருத்து எனக்கு இருககிற தென்றல், அது, மிகக் குறிப்பாக நான் கடவுளில் நம்பிக்கையில்லாதவன என்பதால் தான். பல சந்தர்ப்பங்களில் கிறிஸ்துவ மதத்தின் மிக சுவாரஸ்யமான ஒரு அம்சத்தை நான் சுட்டிக்காட்டியிருக்கிறேன். கிறிஸ்துவ மதத்தின் ஸ்தாபகர்களின் கருத்துப்படி, முக்யமாக அகஸ்டினின் கருத்துப்படி மனித சுதந்திரத்தைக் கடவுள் மதித்தார். கடவுள் மனிதனைச் சுதந்திரமானவனுகப் படைத்தது, இந்தச் சுதந்திரத்தை மதிப்பதற்காகத்தான். அதனுல் ஒவ்வொரு கிறிஸ்துவனையும் கூப்பிட்டு அவன் முடிவுகளுக்கு விளக்கம் கேட்கக்

கடவுள் இல்லை. மனிதன் தனியன். கடவுளின் மீது பாரத்தை இறக்கி விடுவது எளிது. உண்மையில் அப்போது கிறிஸ்துவன் தனியன் தான்—என் மாதிரி, ஜெனே மாதிரி, மற்ற எவரையும் போல். ஆனால், இங்கே அருள் பற்றிய ஒரு கொள்கை இருக்கிறது. நடைமுறையில் பல கொள்கைகள் இருக்கின்றன. அருள் செயல்படும்போதுகூட, நீங்கள் தனியாகக் கடவுளின் எதிரே நிற்க வேண்டிய கணம் வந்துவிடுகிறது. கடவுளுக்குச் சொல்வதற்கு ஒன்றும் இல்லை. உதாரணமாக, அல்ஜீரியப் போரைக் குறித்து. நாகரிகமாக நடந்துகொண்ட பாதிரிகளும் இருந்தனர். பன்றியைப்போல் நடந்து கொண்டவர்களும் இருந்தனர்-ஒன்று உண்மையான நெறியைக் கருத்தில் கொண்டு அல்லது நிறுவப்பட்ட கிறிஸ்துவ மதத்தின் ஆதாயங்களைக் கருத்தில் கொண்டு.

கே: உங்களுடைய சொந்த மதவியலைக் கொஞ்சம் நீட்டி, No Exitல் 'நரகம் மற்றவர்கள் தான்' என்று சொன்னதை விளக்குவீர்களா?

சார்த்தர்: பிறப்பிலிருந்து பணிந்து போக வேண்டிய சூழ்நிலையில் நாம் எறியப்பட்டு மூழ்கி விடுகிறவரை மற்றவர்கள் நரகம்தான். செல்வந்தரின் மகனாகப் பிறந்து விடுகிறீர்கள். அல்லது ஒரு அல்ஜீரியனுடைய மகனாக அல்லது ஒரு டாக்டரின் மகனாகப் பிறந்து விடுகிறீர்கள். அல்லது ஒரு அமெரிக்கனுடைய மகனாகப் பிறந்துவிடுகிறீர்கள். அப்போது, முன்கூட்டியே நிர்ணயிக்கப்பட்ட எதிர்காலம், மற்றவர்களால் உங்களுக்காக உருவாக்கப்பட்ட எதிர்காலம் உங்களுடையது. அவர்கள் நேரடியாக அதை உருவாக்கவில்லை. ஆனால் உங்களை நீங்கள் இருக்கும்படியாகச் செய்யும் சமூக ஒழுங்கின் ஒரு பகுதி அவர்கள். நீங்கள் ஒரு குடியானவனின் மகனாக இருந்தால், சமூக ஒழுங்கு உங்களை நகருக்குப் போகச் சொல்லிக் கட்டாயப்படுத்துகிறது. அங்கே இயந்திரங்கள் உங்களுக்காகக் காத்திருக்கின்றன. இயங்குவதற்கு உங்களைப்போன்ற ஆட்கள் இயந்திரங்களுக்குத் தேவை. கிராமப்புறத்திலிருந்து குறிப்பிட்ட முதலாளித்துவ ஆதிக்கம் உங்களை விரட்டியடித்திருக்கிறது. கிராமவாசியான உங்கள் விதி அதனால் குறிப்பிட்ட தொழிலாளியாக இருக்கவேண்டியதுதான். உங்கள் ஜீவியத்வம்தான் குறிப்பாக என்ன? உங்கள் மீது முழுமையாக, உங்களைத் தேய்த்து இழைத்து ஆதிக்கம் செலுத்தி உங்கள் வருவாயுடன் உங்கள் வாழ்க்கைத் தரத்தைக் குறிப்பாக வகுக்கும் உங்கள் வேலை. இவையனைத்தும் மற்றவர்களால் உங்கள்மீது திணிக்கப்பட்டிருக்கின்றன. இந்தமாதிரி வாழ்க்கையை நரகம் என்று சொல்வதுதான் சரி. அல்லது அல்ஜீரியாவில் 1930ல் 35ல் பிறந்த ஒரு குழந்தையை எடுத்துக்கொள்வோம். வெடித்துச் சிதறி இறந்து போவதற்கும், கடைசியில் வாட்டல், உதைக்கு ஆளாக அவன் விதிக்கப்பட்டிருந்தான். அதுவும் நரகம்தான்.

கே: இந்த விதியிலிருந்து மீள எந்த நம்பிக்கையும் வழியும் கிடையாதா?

சார்த்தர்: நிச்சயம் இருக்கிறது. மற்றவர்கள் உங்களை என்னவாகச் செய்திருக்கிறார்கள் என்பதை எதிர்த்துச் செயல் புரிந்து உங்களை மாற்றியமைத்துக் கொள்ளலாம், அந்த அல்ஜீரியக் குழந்தைக்கு வதையும் சாவும் தான் இறுதியாக முன்கூட்டியே தீர்மானிக்கப்பட்டிருந்தாலும் அவனுடைய புரட்சிதான் அவன் வாழ்க்கை. இன்று அந்தப் புரட்சியைச் செய்பவன். அவன்தான் ஜெனேயுங்கூட.

கே: நீங்கள் கலைஞர்களையும், புரட்சியாளர்களையும் பற்றிப் பேசுகிறீர்கள். தங்கள் விதியை மாற்றி அமைத்துக்கொள்ளச் சக்தி உள்ளவர்கள் வேறு பலரும் இருக்கிறார்கள் என்று நீங்கள் நினைக்கிறீர்களா?

சார்த்தர்: தன் 'விதி'யை மாற்ற மிகுந்த பிரயாசை தேவைப்படுகிறது. அந்த 'விதி' சகிக்கமுடியாததாக இருக்கவேண்டும். சகித்துக் கொள்ள முடியும்போது அது இன்னும் மோசமானதாகி விடுகிறது. இந்நிலையைத்தான் நான் 'அந்நியப்படுதல்' என்கிறேன். நம்முடைய சமூக ஒழுங்கில் மனிதன் வஸ்துக்களால் ஆளப்படுகிறான். இவ்வஸ்துக்களோ, தயாரிக்கப்பட்டு, உருவாக்கப்பட்டு மற்றவர்களால் சுரண்டப்படுவனவே. இம்மற்றவர்கள் அவனை நேருக்குநேர் சந்திப்பதில்லை. கிடையாது. வஸ்துக்கள் என்ற சாதனத்தின் மூலம் அவர்கள் இவனை ஆக்கிரமிக்கிறார்கள். உதாரணமாக, நீங்கள் என்னிலிருந்து உங்களைத் தனித்துக்கொண்டு விட்டீர்கள்—என்னை அந்நியப்படுத்தி விட்டீர்கள்—இந்த டேப் ரிகார்டர் மூலம். நாகரிகம் அனைத்தையும் நமக்கு இடையில் வைத்துக்கொண்டு விடுகிறோம். இன்னும் பலப் பல விஷயங்கள் குறுக்கிடுகின்றன. உங்களுடைய இந்த டேப் ரிகார்டரைச் செய்தவனிலிருந்து, நீங்கள் சார்ந்திருக்கும் பத்திரிகை வரை.

கே: இன்றைய வாழ்க்கையின் 'அந்நியப்படுதல்', 'வேதனை,' 'விரக்தி' பற்றிப் பேசும் அதே நேரத்தில் சுதந்திரம் என்பது அடையக்கூடிய குறிக்கோள் என்று சொல்கிறீர்கள், ஆனால் அதை அடைய எந்தவித நிச்சயமான முறையையும் சொல்வதில்லை என்பதற்காக உங்களை விமரிசகர்கள் கடுமையாக விமர்சித்திருக்கிறார்களே.

சார்த்தர்: ஒருநாள் காலையில் காலுறைகளைப் போட்டுக் கொண்டிருக்கும்போது ஒருவன், "ம்ம், இன்று ஒரு தார்மீக அமைப்பை நான் படைக்கப்போகிறேன்' என்று முடிவு செய்ய முடியும் என்று ஜனங்கள் நினைக்கிறார்கள். ஆனால் தார்மீக அமைப்பு படைக்கப்படுவதன்று. ஏதோ ஒரு விதத்தில் ஏற்கனவே இருப்பது. தார்மீகவாதியை, மதத்தை ஸ்தாபித்தவருடன் குழப்பிக்கொள்ளக் கூடாது. மஹம்மது ஏற்கனவே இருந்த மதங்களைப் பயன்படுத்திக்கொண்டார். கொரானுக்கு அடிப்படையானது எல்லாம் யூதர்கள் செய்து வைத்திருந்தது என்பது உங்களுக்குத் தெரியும். ஸெமடிக் குடியினர் கைப்பிடித்து வந்த ஜுடாயிஸத்தின் மாற்றமே கொரான். அல்லாவினால் நேரடியாகத் தூண்டப்பட்டவர் தாம் என்று மஹம்மது சொல்லிக்கொண்டவர் தான். "அல்லா நாம் என்ன செய்யவேண்டும் என்று கூறுவது இதுதான்." ஆனால் உண்மையான தார்மீகவாதி என்பவன் வேறுபட்டவன். தன்னுடைய விதிகளை, நிலவிவரும் தார்மீக விதிகளைக் கணக்கில் எடுத்துக் கொள்ளாமல், தானே அமைத்துக்கொள்ளும் — அவற்றை மாற்றியமைத்தாலும் சரி—தார்மீக அமைப்பு உண்மையிலேயே ஒரு தார்மீக அமைப்பாகாது. அதைப் பிரசாரம் செய்பவன் சார்ந்திருக்கும் சமூகக் குழுவைத்தான் பிரதிபலிக்கும். ஒரு உதாரணத்தை எடுத்துக் கொள்வோம். ஆந்த்ரே ழீட் சொல்கிறார், "ஒவ்வொரு இடத்தைத் தவிர வேறெங்கும் கடவுளைத் தேடாதே" "வேகம்," "தாகம்" "புலன் நுகர்ச்சியின்பத்திற்குச் சரண்" என்றெல்லாம் பிரசிங்கிக்கிறார். ழீடினுடைய இந்தக் கோட்பாடு ஒரு தொழிலாளிக்கோ, ஏன் ஒரு இன்ஜினீயராகட்டும், வாசல் அறை நிறைய நோயாளிகள் காத்திருக்கும் ஒரு டாக்டருக்காகட்டும் ஏதாவது அர்த்தமுள்ளதாக இருக்கிறது என்று நீங்கள் நினைக்கிறீர்களா? அதன் அர்த்தமெல்லாம் இதுதான். "நான், ழீட், நடுத்தர வர்க்கத்தின் மேல் தட்டைச் சேர்ந்தவன். அந்த வர்க்கத்தில் மட்டுமே காணப்படும் விசேஷ உணர்வுக் கூற்றை வளர்த்துக் கொண்டிருக்கிறேன். அதனால்தான் இலக்கியத்தில் என்னை ஈடுபடுத்திக் கொள்ள முடிந்திருக்கிறது. இந்த இலக்கிய ஈடுபாடு ஒவ்வொரு விதமான அனுபவத்திற்கும் ஏற்ற உணர்வுக்கூற்றை நான் பெற்றிருக்கிறேன் என்பதைக் காட்டுகிறது." இது மத்தியதர வர்க்கத்தின் மேல்தட்டைச் சேர்ந்த ஒரு எழுத்தாளனின் தார்மீகக் கோட்பாடு. அதே வகுப்பைச் சேர்ந்த மற்ற எழுத்தாளர்களுக்கு உகந்தது. நான் பிறப்பினால் அந்த வர்க்கத்தைச் சேர்ந்தவனில்லாவிட்டாலும் எனக்கு இதைப் புரிந்துகொள்ள முடிகிறது. ழீடினுடைய பாத்திரங்கள் போல் இருப்பதுதான் லாபகரமானதில்லையா என்று என்னால் கேட்க முடிகிறது. ஆனால் ஒரு தொழிற்சாலையில் அசெம்பிளி லைனில் எட்டு மணிநேரம் வேலை செய்யும் தொழிலாளிக்கு இந்தமாதிரி அறிவுரை அர்த்தமற்றது. அவன் களைத்துப் போயிருக்கிறான். மூளையை மழுங்க வைக்கும் கடுமையான வேலையினால் அயர்ந்து போயிருக்கும் அவனிடம் வெளியே போய் பிரபஞ்சத்தை புலன் நுகர்விற்காக உலுக்கிப் பார் என்று ஒருவன் எப்படிச் சொல்லமுடியும்?

கே: ஆனால் இந்தத் தொழிலாளிக்குச் சுதந்திரத்தைத் தரக்கூடிய, சாத்தியமான, அர்த்தமுள்ள தார்மீகக் கோட்பாடு உங்களிடம் இருக்கிறதா?

சார்த்தர்: அவனுடைய பிரச்சினை சுதந்திரத்தைத் தக்கவைத்துக் கொள்வது இல்லை. அதை எப்படி அடைய முடியும் என்பதுதான். அவன் அதை அடைய நாம் உதவி செய்ய வேண்டும். இன்று உண்மையான தார்மீக அமைப்பு ஏதும் இல்லை. ஏனென்றால் தகுந்த தார்மீகக் கோட்பாட்டிற்கான நிலைமை இன்று இல்லை. மனிதர்கள் ஒருவருக்கொருவர் புலப்படாதவாறு ஆகிவிட்டார்கள். நான் சொன்னபடி, இயந்திரங்களும், சமூக அமைப்புகளும் கணக்கில்லாமல் பார்வையை மறைக்கின்றன. இன்று உண்மையான தார்மீக அமைப்பு எதைப்பற்றியும் பேசுவதே இயலாது. குறிப்பிட்ட வர்க்கத்தினருக்குப் பொருந்தும் குறிப்பிட்ட பழக்கவழக்கங்களையும், நலன்களையும் பிரதிபலிக்கும் தார்மீகக் கோட்பாடுகளைப் பற்றி மட்டுமே பேசமுடியும். ஒரு புது சமூக அமைப்பிற்குத் தகுதியானவர்களாக மனிதர்களை ஆக்கக்கூடிய ஆதார நிலைமைகள் இன்று காணப்படவில்லை. நம்முடையதைப் போன்ற ஒரு சமூகத்தில் சமூக அமைப்புகளின் திரள்—சொந்த வற்புறுத்தல்கள். ஒவ்வொருவனுக்கும் இருக்கும் 'விதி'யுடன் சேர்த்துத்தான்—பரஸ்பர புரிந்து கொள்ளலுக்குத் தடையாக இருக்கின்றன. இப்படி உங்கள் சொந்த 'விதி'யுடன் நொண்டிக் கொண்டு போகையில் ஒரு நீக்ரோவை, ஒரு அராபியனை, ஒரு க்யூபனை, ஒவ்வொருவரையும் அவர்களுக்கேயான விதியுடன் சந்திக்கிறீர்கள். உண்மையான எந்த உறவுப்பாடும் மிகச் சிக்கலானதாகி விடுகிறது. அல்லது, நீங்கள் ஏதாவது 'இயக்கத்'தைச் சேர்ந்தவராக இருக்கவேண்டும். அதன்மூலம் அதற்கு வெளியே இருக்கும் ஒவ்வொன்றிலிருந்தும் விடுபடமுடியும். அப்போது, உதாரணமாக, நீங்கள் க்யூபாவின் போராட்டத்துடன் அல்லது அல்ஜீரியப் போராட்டத்துடன் சம்பந்தப்படுகிறீர்கள். அப்போதும்கூட,—உங்கள் நோக்கம் உயர்ந்ததாக இருப்பினும்—முழுமையான ஒருமைப்பாட்டை அடைய மாட்டீர்கள். நீங்கள் தொடர்பு கொள்ளும் மனிதன், மனிதனாக முழுதும் உங்களுக்கு இருக்கமாட்டான். ஒரு 'வஸ்து'வாகத்தான்

இருப்பான். அமெரிக்கனுக்கு, உதாரணமாக, க்யூபன் சர்க்கரை என்ற வஸ்துவாகத்தான் இருப்பான்—தகராறு சர்க்கரையைப் பற்றித் தான் என்று நினைவுபடுத்துவதாய்.

கே: அல்லது கம்யூனிஸம்

சார்த்தர்: ஆமாம். அல்லது ஏதோ ஒருவித மான பிரச்சாரம். இன்று மனிதர்களிடையே சகோதரத்துவத்தை உருவாக்க இன்று நிலவும் அமைப்பை எதிர்த்துப் போராட வேண்டும். அதுதான் பயனுள்ள தார்மீக அவசியம். மனிதர்கள் அவர்களுடைய சுதந் திரத்தை வைத்துக்கொண்டு என்ன செய் வார்கள் என்பதைப்பற்றி—அவர்கள் சுதந் திரத்தைப் பெற்றால்—நாம், அன்னியப்பட்ட வர்கள், முழுதும் தனித்துவிட்டவர்கள்—ஏதும் சொல்வதற்கில்லை. ஆனால் மனிதனை மனிதனாக நடத்துவது என்பது கொள்கை ரீதியானது. அதைஎப்போதும் நாம் கைவிடக் கூடாது.

கே: நீங்கள் மார்க்ஸிஸ்டானாலும், கம்யூ னிஸ்ட் கட்சியில் ஒருபோதும் சேரவில்லை. மேலும், சோவியத் ரஷ்யாவுக்குப் பலமுறை சென்று வந்தாலும் ப்ரெஞ்சு கம்யூனிஸ்ட் கட்சி உங்களை ஒப்புக்கொள்வதில்லை. நீங்கள் பூர்ஷ்வா பக்கமும் கிடையாது. ஆயினும் முழு மனதுடன் கம்யூனிஸ்டுகளுடனும் இல்லை. அப்படியானால் கொள்கைரீதியாக எங்குதான் இருக்கிறீர்கள்?

சார்த்தர்: நான் ஒரு இன்டெலெக்சுவல்; அரசியல்வாதி இல்லை. ஆனால் ஒரு பிரஜை என்ற முறையில் pressure groupல் சேர முடியும். அதனால்தான் நான் முழுமனதுடன் அல்ஜீரியர்கள் பக்கம் இருந்தேன். இவை ஒரு பிரஜையின் கடமைகள். என்னுடைய திறமைகள் புத்திபூர்வமானவையாகையால் எழுதுவதன் மூலம் ஒரு பிரஜையாகச் செயல் புரியமுடியும். இன்டெலெக்சுவல் என்ற முறையில் என் கடமை சிந்திப்பதுதான், கட்டுப்பாடு ஏதுமின்றி, அதனால் தவறுகள் செய்தாலும் சரி. எனக்கு நானே எந்தவிதக் கட்டுப்பாட்டையும் வைத்துக்கொள்ளக் கூடாது; மற்றவர்கள் என்னைக் கட்டுப்பாடு செய்யவும் விடக்கூடாது. கம்யூனிஸ்ட் கட்சி யுடன் என் உறவைப் பொறுத்தவரை மார்க் ஸிஸம் அதனுடைய 'துணைப் பயணி'களைக் கொண்டிருந்தால்தான் தன்னுடைய முழு சாத்தியக் கூறுகளை உணரமுடியும்—அதாவது தங்களையே அரசியல் ரீதியாகச் சிறைப் படுத்திக்கொள்ளாமல் மார்க்ஸிஸத்தை விருப்பு வெறுப்பின்றி உள்ளிருந்தவாறே ஆராயும் நண்பர்கள் கம்யூனிஸ்டுகளுக்கு என்ற முறையில்.

கே: கம்யூனிஸ்டுகள் உள்ளிருந்தவாறே விருப்பு வெறுப்பின்றி மார்க்ஸிஸத்தை ஆராய் வதை அனுமதிக்கிறார்களா?

சார்த்தர்: இப்போது கிழக்கு ஐரோப்பா முழுவதும் வெளிப்படையாகக் காணப்படும் பிரச்சினை இது. அரசியல் கட்டுப்பாட்டிற் கும் இன்டெலெக்சுவல் வாழ்க்கையின் தேவை களுக்குமான உறவுமுறைபற்றிய பிரச்சினை இது. தனிமையில் கடைபிடிக்கப்படுவதல்ல இன்டெலெக்சுவல் வாழ்க்கை. புரட்சிகர மான இன்டெலெக்சுவல் வாழ்க்கை, கிழக்கு ஐரோப்பாவில் இன்டெலெக்சுவல்கள் கேட் கும் சுதந்திரம். இது ஒரு மாதிரியான பூர்ஷ வாத்தனமான சௌகரியம் இல்லை. ஆனால் புரட்சியை இன்டெலெக்சுவல் முறையின் மூலம் தொடர்வதற்கு வேண்டிய சுதந்திரம்.

கே: பல நாடுகளின் கைகளில் அணுசக்தி இருப்பதனால் விளையும் அபாயங்களைக்குறித்த அமெரிக்கர்களின் பயத்தை நீங்களும் பகிர்ந்து கொள்கிறீர்களா?

சார்த்தர்: இல்லை. ஏனென்றால் நான் ஒரு ப்ரெஞ்சுக்காரன். ப்ரெஞ்சுக்காரர்கள் அனை வரும் அணுகுண்டைப் பற்றி மிக இலேசான மனதுடன் இருக்கிறார்கள் என்று தோன்று கிறது. ஒரு கார்ட்டுன் நினைவுக்கு வருகிறது. ஒரு கபேயில் அமெரிக்கர்கள், பிரிட்டிஷர்கள், ப்ரெஞ்சுக்காரர்கள் உட்கார்ந்திருக்கிறார்கள். பிரிட்டிஷர், அமெரிக்கர்கள் 'அணுகுண்டு' என்று தலைப்பிட்டச் செய்தித் தாள்களைப் படித்துக் கொண்டிருக்கிறார்கள். ஆனால் ப்ரெஞ்சுக்காரர்களோ, 'பாலின் விலை உயர்ந்து விட்டது' என்ற தலைப்பிட்டச் செய்தித்தாள் களைப் படித்துக் கொண்டிருக்கிறார்கள். ஆச்சரியப்படத்தக்க விதத்தில் ப்ரெஞ்சுக் காரர்கள் அணுகுண்டைப்பற்றிக் கவலையற்று இருக்கிறார்கள். மேலும், இக்கவலையற்ற தன்மையை உயர்ந்ததாகக்கூட நினைக்கிறார் கள். கடந்த பன்னிரண்டு ஆண்டுகளின் காலனிப்போர் இந்த விஷயத்தைப் பற்றிய எண்ணம் எல்லாவற்றையும் மூழ்கடித்திருந் தது. பாஸிஸம் ஒன்றைப் பற்றித்தான் ப்ரெஞ்சுக்காரர்களுக்கு பயம். ஆனால் உண்மையிலேயே எது பயமுறுத்திக் கொண் டிருக்கிறதோ அதைப்பற்றி ப்ரெஞ்சுக்காரர் கண்மூடித்தனமாக இருக்கிறார்கள். நான் முன்பு சொன்னபடி, மனிதர்களுடைய அரசி யல் பிரக்ஞையை வலிவிழக்கச் செய்து, அவர் களை அடிமைத்தனத்திற்கு நிச்சயமாக கீழ்மை படுத்தும் ஒரு இயந்திரத்தொழில் நுட்ப அமைப்பு.

கே: ப்ரெஞ்சு இலக்கியத்திற்கும், சமூகத் திற்கும் இது பொருந்தும் என்று நினைக்கிறீர் களா?

சார்த்தர்: அப்படித்தான் நினைக்க வேண்டி இருக்கிறது. இன்று மிகச் சிறந்த எழுத்தாளர்கள் ப்ரான்ஸில் கிடையாது. "புது நாவல்" எழுதுபவர்கள் திறமை வாய்ந்தவர்களாகத்தான் இருக்கிறார்கள். உருவத்தில் சோதனை என்று பார்க்கும்போது அவர்களுடைய புத்தகங்கள் சுவாரஸ்யமாக இருக்கின்றன. ஆனால் நம் இயந்திரத் தொழில்நுட்ப, அரசியல் ரீதியாக மலட்டுத்தனமான பிரஞ்சு அமைப்பை நியாயப்படுத்துவதைத் தவிர வேறெதையும் தருவதில்லை. மனித இனத்தை முழுதாக எடுத்துக் கொள்ளும், தெளிந்த கண்களுடையவர்களின் செயலாகத்தான் இலக்கியம் இருக்கவேண்டும். குழந்தைகள் பசியினால் செத்துக் கொண்டிருக்கும் உலகத்தில்தான் தான் இருக்கிறோம் என்பதை இலக்கியம் உணரவேண்டும். எழுத்தாளர்களாகவும், மனிதர்களாகவும், மற்றவர்களுக்காக ஏதாவது செய்யமுடிவது —ன்னுடைய சக்திக்குட்பட்டது என்பதை இலக்கியம் உணரத்தான் வேண்டும். அதேமாதிரி, மற்றவர்களும் நமக்காக ஏதாவது செய்ய முடியும்.

கே: அப்படியிருந்தும், உங்களுடைய கடைசி புத்தகமான 'The Words'ல் "என் பிரமைகள் எல்லாம் அகன்று விட்டன. என் வாழ்க்கையை வைத்துக் கொண்டு என்ன செய்வதென்று இப்போது எனக்குத் தெரியவில்லை" என்று எழுதினீர்கள்.

சார்த்தர்: அதைச் சொன்னது 'என்னுடைய இளமைக்கால, இளமை நிறைந்த பிரமைகளிலிருந்து என்னை விடுவித்துக் கொண்டு விட்டேன்' என்கிற அர்த்தத்தில்தான்.

கே: எந்த பிரமைகள்?

சார்த்தர்: ஒரு பூர்ஷ்வா எழுத்தாளன் நம்பிக்கையற்றவனாகத்தான் இருக்க முடியும் என்ற பிரமை. சமூகத்தின் எதிரே ஆயுதமேந்திவிட்டதால் தனிமைக்கு அவன் விதிக்கப் பட்டுவிட்டான் என்ற பிரமை. இயக்கம் நிறைந்த ஒரு சமூகத்தின் உறுப்பினன் நான் என்பதை எப்படி உணரத்துவங்கினேன் என்று The Wordsல் விளக்கியிருக்கிறேன். இளமையின் பிரமைகளிலிருந்து விடுபட்டுவிட்டதால் நான் இப்போது ஒரு ஆப்டிமிஸ்டாகி விட்டேன் என்று நம்புகிறேன்.

கே: அது அப்படியானால், உங்கள் வாழ்க்கையை வைத்துக் கொணடு என்ன செய்வதென்று இப்போது தெரியவில்லை என்று ஏன் எழுதினீர்கள்.

சார்த்தர்: நான் அதைச் செசன்னபோது, பிரமையினின்று ஒருவன் விடுதலை பெறும்போது ஒரு விசித்திர பற்றற்ற உணர்வும் வருகிறது என்பதைக் குறித்தேன். இந்தப் பற்றற்ற நிலை எதனுடனும் பிணைக்காத ஒரு நிலை, என் விஷயத்தில் பயனுள்ள எதையும் என்னால் நினைக்க முடியவில்லை என்பதனால் அல்ல; ஆனால் நான் செய்யக்கூடிய காரியங்கள் மிகப்பல இருக்கின்றன என்பதனால் சமூகஒழுங்குடன்,உலகத்தினுடன் தொடர்பை விட்டுவிடாமலிருக்க, ஏன், ஆல்பர்ட் காமு சொன்ன 'புலன் நுகர்வு இன்பத்தில்' ஈடுபடுவதும்தான். ஆனால் என் வாழ்க்கையை வைத்துக் கொண்டு என்ன செய்வது என்று சொன்னதை இன்னும் விளக்குகிறேன், மிகப்பெரிய தாகத்திலிருந்து திடீரென விடுபட்ட எவனுமே அப்படித்தான் உணர்கிறான். ஒரு பெண்ணைப் பற்றிய தாகத்தை எடுத்துக் கொள்வோம். எல்லாம் முடிந்தபிறகு ஒருவன் தன்னையே கேட்டுக் கொள்கிறான். "நான் ஏன் இவளை நேசித்தேன்"—அவள் யாரென்றுகூட நினைவுகொள்ள முடியாது. ஒரு காலத்தில் இந்தப் பெண்ணைப் பார்ப்பது தவிர்க்க முடியாததாக இருந்தது, அவள் குரலைக் கேட்பது, அவளைப்பற்றி நினைப்பது, அவளைத் தொடர்வது எல்லாம்தான். அதெல்லாம் முடிந்து விட்டது. இந்த ஏகசிந்தனையிலிருந்து நீங்கள் விடுபட்டுவிட்டீர்கள். ஒரு நிம்மதியை உணர்கிறீர்கள். ஏனென்றால் இந்த மாதிரியான பெண்ணைப்பற்றிய தாகம் அவ்வளவு உன்னத நிலை அல்ல. அதே நேரத்தில் போக்கற்றும், குழம்பியும் இருக்கிறீர்கள்.

கே: பெண்களிடம் உணர்ச்சி பூர்வமான ஈடுபாட்டைப்பற்றி அனுபவத்தின் மூலமாகத்தான் சொல்கிறீர்கள் என்பது வெளிப்படை. அப்படியும் நீங்கள் அதைப்பற்றி ஒருபோதும் உங்கள் புத்தகங்களில் எழுதுவதில்லை. ஏன்?

சார்த்தர்: ஏனென்றால் எனக்கு மற்ற விஷயங்களைப்பற்றி எழுத இருக்கிறது என்பதுதான். அதனால் உணர்ச்சிகரமான ஈடுபாடுகள் என்னிடம் இப்போது இல்லை, அல்லது இருந்ததும் இல்லை என்று அர்த்தமில்லை. சரியாகப் பார்த்தால் பெண்கள் என் வாழ்க்கையின் பெரும் அம்சமாகவே இருக்கிறார்கள். ஆனால் என புத்தகத்திலே அவர்கள்சிறிய அம்சம்தான். அந்த மகிழ்ச்சிகள். அவற்றை எனக்கு நன்றாகவே தெரியும். ஆனால் அவற்றைப் பற்றி எழுதுவது எனக்குப் பிடிக்கவில்லை. ஏனென்றால் அவற்றிற்குக் கீழே, ஒருவன் இன்று மனிதனாக இருக்கமுடியும் என்ற கருத்து இருககிறது. ஆனால் உண்மையில் மனிதனாக இருப்பது சாத்தியமேயில்லை. காமு சொல்ல முடியும், "மகிழ்ச்சியாக இருப்பதில் மனிதனுக்கான உரிமையை நாம் அங்கீகரிக்க வேண்டும்." அது சரிதான். ஆனால் அவர் நினைக்கிறார் அது உடனடியாக இப்போதே அங்கீகரிக்கப்படவேண்டும், அங்கீகரிக்கப்படமுடியும் என்று. அதாவது மகிழ்ச்

சிக்கான நிலைமைகளை இன்றே அடையமுடியும் என்கிறார். ஒருவன் எழுதுவதன் மூலம் மற்றவர்களுடன் புலன் இன்பங்களைப்பகிர்ந்து கொள்ள முடியுமென்றால் அது ஏற்றுக் கொள்ளக் கூடியதுதான். ஆனால் அவற்றைத் தனியே நுகர்வது என்பது சகமனிதர்களுடனே சில உறவுகளிலிருந்து ஒருவனை வெட்டிக் கொள்வதும் ஆகும். நான் அல்ஜீரியாவில் இருந்தபோது, என் பக்கத்தில் புழுப் பூச்சிகளால் கண்கள் தின்னப்பட்டுவிட்ட குழந்தை ஒன்று கிடந்தபொழுது இந்த மாதிரி இன்பங்களில் ஈடுபடுவது சிரமமாக இருந்தது. அப்படி ஈடுபடுவது இயலாதது என்று நான் சொல்லவில்லை. எனக்கு அது தர்ம சங்கடமாக இருந்திருக்கும் என்று மட்டும் சொல்கிறேன். மேலும் ஒரு எழுத்தாளனாகவும், நான எதற்கு மிகத் தகுதியானவனோ அதைத்தான் நான் செய்ய முடியும் என்று உணர்கிறேன்—எதை என்னைவிட மற்றவர்கள் சிறப்பாகச் சொல்ல முடியாதோ அதை. என் சந்தோஷங்களைப்பற்றி ஒரு நாள் எழுதுவேன் என்று நான் அடிக்கடி நினைப்பதுண்டு. ஆனால் என் வாழ்க்கையின் இந்த அம்சம் ஒரு முன்மாதிரியாகக் காட்டப்படுவதற்கு உண்மையிலேயே தகுதியற்றது என்று நினைவுபடுத்திக் கொள்கிறேன்.

கே: உங்கள் படைப்புகளைப் படமாக எடுத்ததன் மூலம் ராயல்டி நிறையவே வந்திருக்கிறது இல்லையா? மேலும், தொடர்ந்து உங்கள் புத்தகங்கள் அதிகமாக விற்பனை ஆகின்றனவே.

சார்த்தர்: உண்மைதான்; சொல்லப்போனால் என்னிடம் செலவு செய்ய நிறையவே பணம் இருக்கிறது. ஆனால் கூடவே எனக்குப் பல கடமைகளும் இருக்கின்றன. எதையும் என்னுடைய உடமையாக்கிக் கொள்வதை நான் வெறுக்கிறேன் என்பதுதான் சரி. நம் உடமைகள்தான் நம்மைச் சிறைப்படுத்துகின்றன என்றே எனக்குத் தோன்றுகிறது. அது பணமானாலும் சரி, அதன் மூலமாக அடைகிற பொருள்களாயிருந்தாலும் சரி. நான் ஒரு பொருளை விரும்புகையில அதை இன்னொருவனுக்குக் கொடுக்கவே எப்பொழுதும் விரும்புகிறேன். இது தாராளத்தினால் அல்ல—நானல்ல, மற்றவர்கள்தான் வஸ்துக்களினால் ஆளப்படவேண்டும் என்று விரும்புவதால்தான. மற்றவர்கள் அவர்களுக்கு நான் கொடுக்கிற பொருளை விரும்புவார்கள் என்ற நினைப்பில் எனக்கு சந்தோஷம் கிடைக்கிறது.

கே: நீங்கள் செல்வத்தை உதறிவிடுகிறீர்கள்—புகழை? உலகம் முழுவதுமாக நீங்கள் அடைந்திருக்கிற அல்லது சமீப வருடங்களில் திரும்பப் பெற்றிருக்கிற சிறப்பைக் கண்டு நீங்கள் சந்தோஷம் அடைகிறீர்களா?

சார்த்தர்: ஒருக்கால், சிலவகைகளில். ஆனால் என் அந்தஸ்த்தின் கைதியாவதை நான் விரும்பவில்லை, அது அந்த நிமிடத்தில் எதுவாக இருந்தாலும். இங்கு, இப்போது என் பதை எப்போதும் தற்காலிகமானதாகவே நினைக்கிறேன். அதை விட்டுவிடவே விரும்புகிறேன். சிறுபிள்ளைத் தனமான பிரமையில், ஒரு மனிதன் தன்னை எப்பொழுதும் மேம்படுத்திக் கொள்ளமுடியும் என்கிற பிரமையில் நான் தொடர்ந்து இருக்கிறேன். நான் சில புத்தகங்கள் எழுதியிருக்கிறேன், ஆனால் இந்தப் புத்தகங்களில் உள்ள கருத்துக்களை உலகம் மாறும்போதும் கைவிடக்கூடாது என்பதை என் கடமையாகக் கொள்ளவேண்டும் என்று நினைத்தால் நான் அதன் பிறகும் நானாக இருக்கமாட்டேன் என்று என்னையே எச்சரிக்கை செய்து கொள்கிறேன். அப்போது என் புத்தகங்களுக்கு நானே பலியாகிவிடுவேன். ழீட் செய்தது போல பலவந்தமாகத் தன் கடந்த காலத்தினின்றும் விடுபடவேண்டும் என்பதைக் குறிப்பாகக் கொள்ள வேண்டுமென்று நான் நினைக்கவில்லை; ஆனால் மாற்றத்திற்குத் தயாராக இருப்பதை நான் எப்பொழுதும் விரும்புகிறேன. நான் எழுதிய எதற்கும் கட்டுப்பட்டவனாக என்னை உணரவில்லை. அது போலவே, அதில் ஒரு வார்த்தையைக்கூட என்னுடையது இல்லை என்று கைவிட்டு விடுவதில்லை.

கே: இறுதியாக ஒரு கேள்வி: நீங்கள் ஏன் நோபல் பரிசை நிராகரித்து விட்டீர்கள்?

சார்த்தர்: நான் அதுபற்றிப் பேசாதிருக்கவே விரும்புகிறேன்.

கே: ஏன்?

சார்த்தர்: ஒரு அகாடெமிக்கும் அல்லது பரிசுக்கும் எனக்கும் இடையில் ஏதும் இருப்பதாக நான் நினைக்கவில்லை. எனக்குக் கிடைக்கக்கூடிய மகத்தான புகழ் நான் படிக்கப்படுவதே என்று நான் கருதுகிறேன்.

(ப்ளேபாய் 1965)

தமிழில்: சீனிவாசன்

# அக்கம் பக்கம்

**1972**-ம் ஆண்டின் சாகித்ய அகாடமியின் பரிசு தமிழில் ஜெயகாந்தனுக்குக் கிடைத்திருக்கிறது. நூல் 'சில நேரங்களில் சில மனிதர்கள்?' 'தினமணி கதிரி'ல் வெளியான தொடர் கதை இது.

வாசகர்களோடு சமரசம் செய்து கொள்ளாத ஜெயகாந்தனைப் பரிசுக்கு உரியவராகத் தேர்ந்தெடுத்தது சாகித்ய அகாடமி இலக்கியத்தை நோக்கி மெல்ல வருவதாகப்படுகிறது. பழைய தடத்தை நோக்கிச் செல்லாமல் இந்த நிலை தொடர்ந்து நீடிக்கவேண்டும்

ஃ ஃ ஃ

ஒவ்வொரு வருடமும் சாகித்ய அகாடமி பரிசளிப்பு விழாவின் போது ஜனாதிபதியிடம் எப்படிச் சென்று, நின்று, பரிசைப் பெற்று, திரும்பிவருவது என்பதை இரண்டு நாட்களுக்கு முன்பே எழுத்தாளர்களுக்கு ஒத்திகை செய்து காட்டுகிறார்களாம். அதில் பரிசு பெறும் எழுத்தாளர்கள் கலந்துக்கொண்டு பயிற்சி பெறவேண்டுமாம்.

பாராட்டுப் பெறும் ஒவ்வொரு எழுத்தாளனையும் இப்படி மேடை ஏற்றி இறக்கி ஒத்திகை பார்ப்பது அவனது ஆன்மாவைப் பாதிக்கும் ஒரு செயலாகவே படுகிறது. ஜனாதிபதி,பிரதம மந்திரி ஆகியோர்களிடமிருந்து பரிசோ, விருதோ பெறுவதால் எழுத்தாளனுக்குத் தனியாகப் புகழ் ஏதும் கூடுவதில்லை. மாறாக எழுதத்தாளர்களை பாராட்டுவதன் மூலம் தேசம் புகழ் பெறுகிறது.

ஃ ஃ ஃ

இந்தியாவிலேயே பெரிய இலக்கியப் பரிசு பாரதீய ஞானபீடப் பரிசு தான். சிறந்த நூலுக்கு அது வழங்கும் பரிசுத் தொகை லட்சரூபாய். இந்திய மொழிகளில் இந்தி, வங்காளி, குஜராத்தி, மராட்டி, கன்னடம், மலையாளம், தெலுங்கு ஆகியமொழிகளுக்கு இதுவரை பரிசுகள் வழங்கப்பட்டு விட்டன. தமிழுக்குப் பரிசு கிடைக்கவில்லை என்று தமிழர்களில் பலர் குறைப்பட்டுக் கொள்கிறார்கள் தமிழ்மொழிக்குப் பரிசு கொடுக்கப்படவில்லை என்பதற்காக ஞானபீடக்காரர்கள் கூட வருத்தப்பட்டுக் கொள்கிறார்களாம். இந்த ஆண்டு அநேகமாகத் தமிழுக்குக் கிடைக்கலாம்.

தமிழ்ப் பிரிவுக்கு ஆலோசகர்களாக இருப்பவர்களைப் பார்க்கும்போது அப்படியே தமிழுக்குப் பரிசு கிடைத்தாலும் அது உண்மையான இலக்கியத்திற்கான பரிசாக இருக்குமா என்பது சந்தேகமாகவே இருக்கிறது.

ஆலோசகர்கள்: உயர்நீதிமன்ற நீதிபதி எஸ். மகராஜன்; மாநிலத் தமிழாசிரியர் கழகத் தலைவர் மா. கி. தசரதன்; பேராசிரியர் அ. சீனிவாசராகவன்.

நல்ல இலக்கியத்தை இனங்கண்டு தேர்ந்தெடுக்கும் பரிச்சயமும், விமர்சன ரீதியாக இலக்கியத்தை அணுகும் பார்வையும் அற்றவர்கள் ஆலோசகர்களாக இருக்கும் வரையில் இரண்டாம் தர, மூன்றாம் தர, நான்காம் தர நூல் முதல் தரமானதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டு பரிசையும், பாராட்டையும் பெறக் கூடும். வரப்போகும் தமிழுக்கான ஞானபீடப் பரிசு இதிலிருந்து தப்பி, தரமான நூலுக்கான ஒன்றாக இருக்கும் என்பது என்ன நிச்சயம்?

ஃ ஃ ஃ

1966ல் தாமரை, எழுத்து, கணையாழி ஆகிய மூன்று பத்திரிகைகள்தான். ஆனால் 1973—ல்தான் எத்தனை? கணையாழி, தாமரை, தீபம், கசடதபற, வானம்பாடி, அஃக், ஞானரதம், வண்ணங்கள், சதங்கை, பிரச்னை, தொடுவானம், இன்று, தெருக்கூத்து...

இதற்கு இடையே 'நடை' வந்து நின்று விட்டது.

வளர்ந்துவரும் தமிழ் இலக்கியத்தின் போக்கை உணராமல் வியாபாரத்தில் மட்டுமே கருத்தாக இருக்கும் பெரிய பத்திரிகைகளின் மீது ஏற்பட்ட அதிருப்தியின் சின்னங்கள்தான் இந்த சின்னப் பத்திரிகைகள்.

சமீப காலத்தில் வெளிவரத் தொடங்கியிருக்கும் வானம்பாடி, தெருக்கூத்து, இன்று, விவேகச் சித்தன் போன்றவைகள் தனி இதழுக்கு விலையோ, சந்தாவோ கேட்கவில்லை. ஆர்வமுள்ளவர்கள் தபால்தலையுடன் எழுதி இதழ்களைப் பெற்றுக் கொள்ளலாம் என்கிறார்கள்.

ஒரு இதழைப்பெற 25காசு தபால்தலையும், அதை அனுப்பிவைக்க 25 காசும் ஆக 50 காசு செலவழிக்க வேண்டும். வருடத்திற்கு இது ஆறு ரூபாய். இப்படி ஒரு வாசகன் ஆறுரூபாய் செலவழித்தும் கடைசியில் பத்திரிகை நடத்துபவர்கள் தாங்கள் பத்திரிகையை இலவசமாக அனுப்புவதாகத் தான் சொல்லிக்கொள்ள நேரிடும். இதைத் தவிர்க்கலாமே.

நா. கிருஷ்ணமூர்த்தி

சில நிர்வாகக் காரணங்களை முன்னிட்டு 'பிரச்னை'யின் பெயரை மாற்றிக் கொள்ள வேண்டிய அவசியம் 'பிரச்னை'யின் ஆசிரியர் குழுவுக்கு ஏற்பட்டிருக்கிறது. அதனால் மார்ச் முதல் தேதி இதழிலிருந்து 'பிரச்னை' 'உதயம்' என்கிற புதுப் பெயரைத் தாங்கி வரும்.

## உதயம்

(மாதமிரு முறை)

ஆசிரியர்: தெ. சண்முகம்
தனி இதழ்: 30 காசு
ஆண்டுச் சந்தா: ரூ. 8-00
அரையாண்டுச் சந்தா: ரூ. 4-00

ஆசிரியர் "உதயம்"
22N, மேற்கு மாடவீதி
காலடிப்பேட்டை
சென்னை-600019

Published by N. Mahaaganapathy 47, Nallathambi Mudali Street, Madras-5. Printed by M. K. Swamy at Prem Press, 8, M. K. Amman Koil St., Madras-4. Edited by N. Krishnamoorthy No. 1, Devadi Street, Madras-4.